REGD. No. M. 1190.







# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.



Vol. 29. பொருளடக்கம். No. 1.

ஜு... ஆடி ௴ கஉ

உள்ளடக்கம். பக்கம்.











ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி 29 | சுபானுஹு ஆடிமீ கஉ 1943ஹு ஜூலைமீ 17உ | பகுதி 1

## கடவுள் வணக்கம்.

வடக்கரையை மத்தாக்கி
வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாள்
கடல்வயிறு கலக்கினையே!
கலக்கியகை யசோதையார்
கடைக்கயிற்றால் கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய்!
மாயமோ! மருட்கைத்தே! (1)

அறுபொருள் இவனென்றே
அமரர்கணம் தொழு(து)ஏத்த
உறுபசியொன்று இன்றியே
உலகுஅடைய உண்டனையே!
உண்டவாய் களவினான்
உறிவெண்ணெய் உண்டவாய்
வண்துழாய் மாலையாய்!
மாயமோ! மருட்கைத்தே! (2)

திரண்(டு) அமரர் தொழு(து) ஏத்தும்
திருமால்நின் செங்கமல
இரண்டடியால் மூவுலகும்
இருள்தீர நடந்தனையே!
நடந்தஅடி பஞ்சவர்க்குத்
தூதாக நடந்தஅடி
மடங்கலாய் மாறுஅட்டாய்!
மாயமோ! மருட்கைத்தே! (3)



## உணவுப் பஞ்சம் நிவர்த்தி யாகுமா?

---

"பசி! பசி!! பசி!!!" என்று எங்கு பார்த்தாலும் ஓரே கூக்குரலா யிருக்கிறது. பட்டினிப் பட்டாளங்களின் தொகை நாளுக்குநாள் அதிகரித்து வருகிறது. "சஞ்சி வரதப்பா!" என்றதும் "எங்கு வருதப்பா" என்று கேட்ட பரம ஏழையின் நிலையில்தான் இன்று நம் நாட்டி லுள்ள ஏழை, பணக்காரன் எல்லார் நிலையும் இருக்கிறது. இன்று நம் நாட்டுமக்கள் உண்ணும் உணவுப் பொருள்களுக் குப் படும் கஷ்டத்தைப்போல் இதற்கு முன் எக்காலத்திலும் பட்டதில்லை. 'தாது வருஷத்துப் பஞ்சம்' என்ற பேர்பெற்ற பஞ்சங்கூட இப்போது நிலவியுள்ள உணவுப் பஞ்சத்துக்கு ஈடு காணாது.

'இனிய பொழில்கள் நெடிய வயல்கள் எண்ணரும் பெருநாடு
கனியுங் கிழங்குந்தான் யங்களும் கணக்கின்றித் தரும் நாடு.'

என்று வருணிக்கப்பட்ட நீர்வளம் நிலவளம் மிக்க நம் நாட்டில் மக்கள் உண்ணும் உணவுக்கு இன்று பரதவிக்கும் பரிதாபம் கண்கொண்டு காணத் தகாததா யிருக்கிறது. பொருளாதார சமத்துவம் இல்லாமை காரணமாக, பரம ஏழைகளா யுள் ளோர் வயிறார உணவு உண்ண முடியாமல் அரைவயிறு, கால் வயிறு சாப்பாடு சாப்பிட்டு வந்திருக்கிறார்களே யொழிய, அறவே முழுப் பட்டினி இருந்தார்கள்; அதுவும் பட்டினியால் இறந்தார்கள் என்பதை இந்திய சரித்திர ஏட்டில் எட்டுணை யும் காண முடியாது.

ஆனால், இன்றைய நிலைமை என்ன? இன்று உண்ண உணவுப் பொருள்களின்றி இந்தியாவின் பல பாகங்களிலும் மக்கள் பட்டினியால் மடிகின்றனர். ஒரிஸா மாகாணத்தில் பட்டினியால் பலர் மாண்டனர் என்பது சமீபத்தில் ஒரிஸா சட்டசபையில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு, சர்க்கார்

காரியதரிசி பதிலளித்ததி லிருந்து தெரிகிறது. நல்லுணவின்றி எழுபது பேர் மரணமடைந்த தாகவும், அவ்விதம் இறந்தவர் கள் இப்போதைய வாழ்க்கை சம்பந்தமான கெடுதலான நிலைமையையும் உணவுக் குறைவையும் தாங்க முடியாமல் மரணமடைந்த தாகவும் பாலஸோர் மாஜிஸ்டிரேட் வெளி யிட்ட அறிக்கை கூறுகிறது. வங்காளத்தில் உணவின்றி மக்கள் தவிக்கின்றனர். பட்டினியால் சாவதினின்றும் மக் களைக் காப்பாற்ற வங்க சர்க்கார் முற்பட வேண்டுமென்று டாக்கா வக்கீல்கள், சங்கம், பொதுஜனங்கள் சங்கம், கிழக்கு வங்காள நிலச்சுவான்தார் சங்கம், டாக்கா வியாபாரிகள் சங் கம் ஆகியவற்றின் ஆதரவில் நடந்த மகாநாடொன்றில் தீர் மானம் நிறைவேற்றி யிருக்கின்றனர். இவ்வுணவுப் பஞ்சம் காரணமாகவே, கல்கத்தாவில களவு முதலிய குற்றங்கள் அதிகப்பட்டிருப்பதாக, கல்கத்தா நகரப் போலீஸ் கமிஷனர் தாம் வெளியிட்டுள்ள அறிக்கை யொன்றில் கூறுகிறார். நம் மாகாணத்திலோ காசு கொடுத்தாலும் அரிசி கிடைப்பது அரிதாயிருக்கிறது. மலையாளத்தில் புல்லைத் தின்று மக்கள் வயிற்றுப் பசியைப் போக்க முயன்று வருகிறார்களாம். இவ்வித நெருக்கடியான நிலைமைக்குரிய காரணம்தான் என்ன? நம் நாட்டில் உணவுப் பொருள்கள் போதியபடி இல்லையா? இருக் கிறது என்கிறார் இந்தியா மந்திரி. அப்படியானால் ஏன் மக்களுக்குச் சௌகரியமாகக் கிடைக்க மாட்டேன் என் கிறது. அதற்கு இந்தியா மந்திரி என்ன பதில் சொல்கிறார்? தெரியுமா! 'ஒழுங்கீனமான விநியோகமே காரணம்' என்கிறார். ஒரு பொறுப்புள்ள சர்க்கார் தலைவர் கூறும் சமாதானமா இது? எது எப்படி யிருப்பினும் மக்களுடைய அன்றாட வாழ்க் கைக்கு இடையூறு உண்டுபண்ணக்கூடிய நெருக்கடியைப் போக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமையாகும்.

இந்திய சர்க்கார் டில்லியில் உணவுப் பொருள் மகாநாடு ஒன்று கூட்டி யோசித்தனர். இதற்குமுன் சென்ற மாதம் பம்பாயில் நடந்த மகாநாட்டின் பயனாக உணவு இலாகா ஒன்று ஏற்படுத்தப் பட்டது. மேஜர் வுட் என்பவர் அதன் தலைவராக நியமிக்கப் பட்டார். ஆனால் பலன்தான் ஒன்றும் விளைய வில்லை. டில்லி மகாநாட்டில் சில முக்கிய தீர்மானங் கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் அடிப்படையான பிரச்சினை இன்னுந் தீர்க்கப்பட வில்லை. மாகாணங்களுக்குத் தத்தம் நிலைமைக்கேற்ப சுதந்திரமாகத் தானியப் போக்கு வரத்துகளைக் கட்டுப் படுத்தும் உரிமை அளிக்கப்பட்டிருக் கிறது. போதிய வளவு தானியமில்லாத மாகாணங்களுக்குத் தானியமுள்ள மாகாணங்கள் உதவி புரியவும் இடமேற்

பட்டிருக்கிறது. ஆனால், வெளி நாட்டு ஏற்றுமதியைக் கண்டிப்பாக நிறுத்தவேண்டு மென்று மகாநாடு தீர்மானிக்காதது வருந்தத்தக்கது. தேசத்தின் தேவையையே பூர்த்தி செய்ய முடியாம லிருக்கும்போது, வெளிநாட்டுக்குத் தானியத்தை ஏற்றுமதி செய்ய இட மளிப்பது நியாயமா? என்பதை அரசாங்கம் சிந்தித்துப் பார்க்கவில்லை.

நகரங்களில் அரிசிப் பங்கீடு முறை வேண்டுவது அவசியம் என்று முடிவு செய்திருப்பது வரவேற்கத் தக்கது. கிராமங்களைவிட நகரங்களில் தான் உணவுப் பொருள்கள் கிடைப்பது கஷ்டமா யிருக்கிறது. ஆதலால், இக் கஷ்டத்தைப் போக்க, அரிசிப் பங்கீடு முறை கூடிய சீக்கிரம் வரவேண்டும். பம்பாய், பெங்களூர் முதலிய நகரங்களின் அனுபவம் பங்கீடு முறை பொதுமக்களுக்குச் சௌகரியத்தை யுண்டு பண்ணும் என்று தெரிவிக்கிறது. ஆனால், ஒன்று. போதிய சப்ளை எப்போதும் கிடைக்கும்படி முன்னேற்பாடு செய்து, நேர்மையான முறையில் பங்கீடு ஏற்பாடு நடைபெற வழி செய்ய வேண்டும். கொள்ளை லாபம் அடிக்கும் பெரிய வியாபாரிகள் நடவடிக்கைகளைக் கூர்மையாகக் கண்காணித்து கடுமையான நடவடிக்கை யெடுத்துக் கொள்ளவேண்டும். சில்லரை வியாபாரிகள் தொகையைப் பெருக்கவேண்டும். அப்போதுதான் ஜனங்கள் மணிக் கணக்கில் காத்திருந்து கூட்டத்தில் ஒருவரை யொருவர் நசுக்கிக்கொண்டு அரிசி வாங்கக் கஷ்டப்படும் தொல்லை ஒழியும்.

நம் சென்னை மாகாணத்தைப் பொறுத்த மட்டில், உணவுப்பொருள் பிரச்சினையை ஒருவாறு தீர்க்க, சர்க்கார் செய்துள்ள திட்டம் இன்ன தென்பதை, கவர்னர் ஆலோசகர் ஸர் ஹூக் ஹூட் தெளிவுபடுத்தி யிருப்பது பாராட்டத் தக்கது. மாகாணங்க ளிடையே சுயேச்சை வியாபாரம் என்பதே ஒழிந்து விட்டது என்றும், மாகாணத்துக்கு வெளியே அரிசி ஏற்றுமதி செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் கிடையாது என்றும், இராணுவத்துக்கு மட்டும் மாதம் 3,500 டன் அரிசி அனுப்ப வேண்டியது தான் சர்க்கார் பொறுப்பு என்றும், மற்றபடி, மாகாணத்தின் உள் தேவையைச் சீராக்குவதுதான் சென்னை சர்க்காரின் முக்கிய வேலையா யிருக்கும் என்றும் கூறியிருக்கிறார். இவ்வாறு கூறி விடுவதோடு சர்க்காரின் பொறுப்பு நீங்கி விடவில்லை. நிலைமை ஒழுங்காகும் வரை அவ்வப்போது ஏற்படும் பிரச்சினைகளைக் கவனித்து நெருக்கடியை நிவர்த்திக்கச் சர்க்கார் இடைவிடாது முயன்றுவர வேண்டும். இவ்விதஞ் செய்தால் தான் தற்போதைய உணவுப் பொருள் நெருக்கடியை ஓரளவேனும் போக்க முடியும்.

# புத்தாண்டு வாழ்த்து

1

பொன்னனைய சிறுமகளிர் புதுக்கு சிற்றில்
அலையழித்துப் போகக் கண்டு
'அன்னையிடம் அறிவிப்பேம், அலைகடலே!'
என்றிரங்கி அலறி யோட!
தன்னுடைய திரைக்கரத்தால் தரளமுநற்
பலகறையும், சங்கு, மீனும்,
சென்னை நகர் போதினியே! செங்கதிரோன்
உள்ளளவும் சிறந்து வாழி! 1.

கலைமகளால் நிறை கல்வி, கடல் மகளாற்
பெருஞ் செல்வம், கருதுங் காலை
மலைமகளாற் பெரும்வன்மை வருமென்பார்,
மாநிலத்தில்! மகிழ்ந்து நோக்கில்
தலைமகளாய் இம்மூன்றுந் தருகின்றாய்!
நீயேதான்! தருணங் கண்டு,
நிலைமகளாம் போதினியே! நீடுலகில்
எந்நாளும் நிறைந்து வாழி! 2.

நாமணக்குங் கட்டுரைகள், நந்தமிழின்
நற்கலைகள், நயங்கள் துன்னும்
பாமணக்கும் பொன் மொழிகள், பகுத்தறியும்
விஞ்ஞானம், பாலர்க் கேற்ற
தேமணக்குஞ் சிறுகதைகள், சிறந்தொளிர
திங்களொரு முறை வருஉம்
பூமணக்கும் போதினியே! பூவுலகில்
எந்நாளும் பொருந்த வாழி! 3.

எத்தனையோ பத்திரிகை இவ்வுலகில்
பணியாற்ற இருக்கக் கண்டோம்!
அத்தனைக்கும் உனைப்போல அருந் தமிழ்க்குத்
தொண்டாற்றும் ஆற்ற லுண்டோ?
புத்தமுதே! போதினியே! புலவர்புகழ்
புதுமருந்தே! பொருந்த நீதான்
கொத்தலரும் மெல்லிதழிக் கொற்றவனார்
தண்ணருளால் குலவி வாழி! 4.

நம் நாட்டுத் தமிழ் வாழ! நம் நாட்டு
வளம் வாழ! நாடி வாழும்.

—"நீலா", ஜெயங்கொண்ட சோழபுரம்.

## 2

சீரார் புகழுறுஞ் சென்னையம் பதியிற்
பேரார் ஞானப் பெருஞ்சுடர் எனவே
திங்கள் தோறும் தேனமு தளிக்க
எங்குந் தோன்றும் எழிலானந்த
போதினி யாகும் பொன்னிக ரணங்கே!
மேதினி பரவும் மெய்ப்புகழ் பாவாய்!
இருளைக் கடியும் இரவி யன்ன
மருள்புற விருளை மாய்க்கு மருந்தே!
தேனினு மினிய தீந்தமிழ் பயில்வோர்
ஊனமா ரகவிருள் ஒழிக்கு முயிரே!
நனிபுக முடைமுனிசாமி யென்னும்
புனிதன் வளர்க்கும் பொற்புடை நங்காய்!
உரைநடை வல்லவன் உயர்தமிழ்ப் புலவன்
துரைக்கண் ணனெனும் தோன்றல் மகிழ்வாய்
அணிசெய் வதனல் அவனியிற் சிந்தா
மணியென விளங்கும் மாண்புறும் அமுதே!
வாழ்க! வையக மீது
வாழ்க! வாழ்க! வாழ்கபல் லாண்டே!

—மு. த. வேலாயுதம், புதுவை.

## 3

ஏதம் நகைச்சொல் எத்துரையர் ஆனந்த
போதினீ! நின்மொழியைப் பொற்பமைந்த—மேதினியோர்
பொன்மொழிபோல்போற் றுவரால்போற்ருதார் போற்றுவர்
மன்ருத மற்றை மொழி. (1)

செந்தமிழைப் பைந்தமிழைச் சேமநிதித் தீந்தமிழைத்
தந்துதவும் ஆனந்த போதினியே!—நந்தா
விளக்கே! நின் நீதி யறிந்தன்ரோ விண்ணோர்
விழித்தகண் மூடிலர் மன். (2)

தாதுநிறை தண்டா மரையிலுறை செல்வியே!
மாதம் ஒருமுறை வந்திலகும்—போதினியே!

மாண்டமனத் தோன்மா தொருபாகன் றன்னருள்ால்
நீண்டநாள் நீ வாழ்க நிலத்து. (3)

—பொ. முத்துக்குமார சுவாமி, நெல்லை.

## 4

காரார் வண்ணக் கட்டலே! வருக;
கனகக் குன்றே! கடிதே வருக;
ஓரார் தம்மை ஓர்வித் தொளிரும்
ஒளியே! வருக; தீஞ்சொற் கனியைப்
பாரார் உண்ண மகிழ்ந்து கொடுக்கும்
பண்ணே! வருக; நற் பயனே! வருக;
ஏரார் ஆனந்த போதினி! வருக;
எழிலோய்! இனிதே வருக; வருகவே. (1)

ஆசொன்றும் இல்லாத ஆனந்த போதினி நீ!
அகமகிழ்ந்து வரவேண்டும் புகழ்மலிந்து வரல்வேண்டும்
தேசுபெறும் புகழுடைய புண்ணியனே வரல்வேண்டும்
தீஞ்சொல்லால் கட்டுரைகள் பலகொண்டு வரல்வேண்டும்
மாசுகமே! மன்னுபெருந் தமிழ்க்கட்லே! வரல்வேண்டும்
மங்கலமாய்ப் பொங்குதமிழ்ப் பறைகொட்டி வரல்வேண்டும்
வீசுபுகழ்த் தேமதுரத் தீங்கனியே! வரல்வேண்டும்
வீறுடைய ஆனந்தா! இனிதேநீ வரல்வேண்டும். (2)

—S. நாராயணன், கூடலூர்.

## 5

பஃறொடை வெண்பா

வாழிமகிழ் வூட்டும் "ஆனந்தபோதினி"யே!
ஏழிசை நற்றமிழ் இன்குறள்போல் நீடூழி!
பாரிற் பெரும்போரில் பாழ்பட்டுத் திக்கெட்டும்
வேரில் வெந்நீர்கொண்டதன் செடிபோல் மீக்கிளைத்து
வாடும் தமிழர்க்(கு) உதவி வள்ளல்போல்,
பழமை மிகப் பேசிப் பாழ்கொள்ளும் மாந்தர்க்கு
உழுவலன் போடும் புதுமை உரைத்து நலம்
வானோர் கலைவளரும் மாமதிபோல் செந்தமிழின்
வானோர் கலைவளர்த்து மாமதியாய் நாட்டு மொழிப்
பற்றும் மிக வூட்டிப் பண்பாய்ச் சுதந்திரமாய்
பற்றும் இழிவோட்டி; பண்புடையார் நட்பேபோல்
கற்கும் தொறும் இனிமைகாட்டி, நடுநிலைமை
அற்கும் காலம்வரினும் அஞ்சாது கைப்பிடித்து;

பேர்ற்றிப் பகுத்தறிவை, ஆன்ற புலவோரை,
மாற்றலரும் போற்ற மகிழ்ந்து!

—மா. வே. தேவராசன், கமுதி.

6

வெண்பா

கண்கண்ட நற்பொருளே! காதலரின் துய்மைநவில்
பண்கண்ட பாவே! பலரசமே! மண்கண்ட
பூத்தொகையே! ஆனந்த போதினியே! வாழியவே!
நாத்தழுப்பப் பாடுகிறோம் நன்கு. (1)

செம்மனத்தன்! தண்ணளியன்! சீர்-என்-முனிசாமி!
எம்மனத்தன்! ஈன்ற எழிலணங்கே!—அம்மம்ம!
ஆருன் அழகை புகழை அளந்துரைப்பர்?
* பாருன்னு போதினியே! பார். (2)

—வித்துவான். எம். சாம்பசிவம்.
—இரட்டணை. ஆர். ருக்மணி, பெண்ணாகடம்.

* பார்+உன்னும்=உலக மக்களின் நினைவிலிருக்கும் அல்லது கருதும் என்றபடி.

# திரு. வி. க. மணிவிழா மலர்

பிரபல பத்திரிகாசிரியரும் தமிழ்ப் பேரறிஞரும் தமிழ்நாட்டில் அரசியல், தொழிலியல், சமய இயல், மொழியியல், சமுதாயம் முதலிய பல துறைகளிலும் உழைத்துப் புதிய வழிகோலியவருமான திருவாளர்-திரு. வி. கலியாணசுந்தர முதலியார் வருகிற ஆவணிமீ 9-ந்தேதி அறுபது ஆண்டு நிறையப் பெறுகின்றார் என்பதும், அந் நிறைவை ஒரு விழாவாகப் பலவகையிலும் சிறப்பாகக் கொண்டாடத்தக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்பதும், நாம் சென்ற இரு மாதங்களாகவே தமிழ் நாட்டாருக்கு அறிவித்து வந்திருக்கிறோம். சென்னையில் திரு. வி. க. மணிவிழாக் கழக மொன்று அமைக்கப்பட்டு, மேற்படி விழாவை வெகு சிறப்பாகக் கொண்டாட முயற்சிக்கப்பட்டு வருகிறது. நாம் ஏற்கனவே தீர்மானித்திருந்தபடியும், மணிவிழாக் கழகம் வேண்டுகோட்படியும் நமது "ஆனந்தபோதினி" ஆவணி மாத இதழை திரு. வி. க. மணிவிழா மலராக வெளியிட நிச்சயித்திருக்கிறோம். ஆகவே, தமிழ்ப் பேரறிஞர்களும், இளம் எழுத்தாளர்களும் திரு. வி. க.வைப் பற்றிக் குண சித்திரம், பொதுநல சேவை, தமிழ்ப்புலமை, அவர் இயற்றிய நூல்களைப் பற்றிய ஆராய்ச்சி முதலியவைகளைக் குறித்து பொருள் பொதிந்த கட்டுரைகளை ஆடிமாதம் 10-ந்தேதிக்குள் எழுதி யனுப்புமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். அன்பர்கள் திரு. வி. க. பால் தங்களுக்குள்ள அன்பை நம்முடன் சேர்ந்து இவ் வகையாக வெளிப்படுத்துவார்கள் என்று நாம் நம்புகிறோம்.

# மகளிரைப் பழிப்பது பற்றி

(வித்துவான். எம். சாம்பசிவம்—இரட்டணை. ஆர். ருக்மணி.)

மகளிரைப் பற்றியும் மகளிர் தன்மையைப் பற்றியும் அன்பர்-துரை, விரிவாகக் கூறியுள்ளாராதலின், அவற்றை விடுத்து, பாட்டின் உரையையும், காரணத்தையும் நோக்குவாம்.

“ஐம்புலன் களும்போல் ஐவரும்பதிகள் ஆகவும்
இன்னம் வேறொருவன்
எம்பெருங் கொழுநன் ஆவதற்கு உருகும்,
இறைவனே! எனது பேரிதயம்;
அம்புவிதனில் பெண் பிறந்தவர் எவர்க்கும்
ஆடவர் இலாமையின் அல்லால்
நம்புதற்கு உளதோ? என்றனள், வசிட்டன்
நல்லற மனைவியே அனையாள்.”

இப் பாடலின் சந்தர்ப்பம் முதலியவை அன்பர்-துரை, முன் இதழில் குறித்துள்ளார்; காண்க.

இப் பாட்டிற்கு உரைகூறப் புகு முன் சிலவற்றைச் சிந்தித்துக்கொள்ள வேண்டி இருக்கின்றன. அவையாவன: இப் பாட்டு, ஆரியரின் கதையில் உள்ளது; ஆரியரின் ‘கற்பு’ முறைக்கும், தமிழர் “கற்பு” முறைக்கும் அதிக வேறுபாடு உண்டு; ஆதலின், ஆரிய நாகரிகத்தோடு பொருத்தி, இப் பாட்டைப் பொருள் கொள்ள வேண்டும்; பெண்களுக்கும் காதலிக்குங் குணம் உண்டு, என்பன போன்றவை.

ஒரு பெண்ணை, வேறு குடும்பத்தில் பிறந்த சகோதரர்கள் அனைவரும், இல்லாளாக ஏற்று, வாழ்க்கை புரிதல் ஆரியர் வழக்கம்! நாகரிகம்!! ஆரிய நாகரிகத்தையும் மொழியையும், இலக்கணத்தையும் பின் பற்றியுள்ள மலையாளிகளிடத்திலேயும் இன்று அவ் வழக்கத்தைக் கண் கூடாகக் காணலாம்.

கன்னன், பாண்டவரின் சக உதிரன்! அதாவது, உடன் தோன்றல். பாண்டவருடன் கன்னன் வாழ்க்கை நடத்தாத ஒரே காரணத்தைக் கொண்டு, ‘அவன், வேறு’ என்று பிரிப்பது நியாயமல்ல. ஆதலினால் கன்னன், துரோபதைக்குக் கணவனாக உரியவன்—உரிமை யுடையவன். ஆனால், ‘கன்னன், பாண்டவரின் சக உதிரன் என்று, அப்பொழுது யாருக்கும் தெரியாதே’ என்பது, நல்ல சமாதானமு மாகாது.

‘உண்மைக் காதல்’, தெய்விக் காதல்’ முதலிய சொற்றொடர்களை நாம் காணுந்தோறும் நாம், ‘காதல் என்பது தெய்விக சக்தியின் துணையால் ஏற்படுவது போலும்’ என்று கருதுகிறோம். எனினும், காதல், பலரிடத்து வைக்குந் தன்மையது அன்று; பலரிடத்தும் வைக்கும் நிலைக்குக் காதல் வருமாயின், அது, காதல் எனப் படாது; காமமே யாம்.

ஒரு பெண் ஒரு ஆடவனைக் காதலிக்கிறாள்; காதலித்தாலும் பல காரணங்களால் சில சமயங்களில் காதலனையே மணந்து

கொள்ள முடியாமல் வேறொருவனுக்கு வாழ்க்கைப்பட நேர்ந்து விடுதல் உலகியலாகத் தற்போது நாம் கண்டு வருகிறோம். நிர்ப்பந்தத்தின்மேல் சமூக சட்ட திட்டங்களுக்கு அடங்கி, தன் காதல் நிலைமைகளைப் பெண், அகத்திலேயே அடக்கிக்கொள்ள நேரிடுகிறது.

தெய்விகத்தால் ஏற்பட்ட அந்தக் காதல், 'வேறிடத்தில் வாழ்க்கைப்பட்டு விட்டாள்' என்னும் காரணத்திற்காக அழிந்து போவதில்லை; எனினும், இருதயத்தின் ஓர் மூலையில் அது பெட்டிப் பாம்புபோல் அடங்கிக் கிடக்கிறது. தெய்விகம் அழியுமா? அதனால்.

அப்படித்தான் கன்னன் மீது துரோபதைக்குத் தெய்விகமாக ஏற்பட்டு, உள்ளத்திலேயே அடங்கிக் கிடந்தது, காதல். கன்னன் ஒரு சமயம் தேரின்மேல் வரும்போது கண்டு, துரோபதை காதலுற்றாள் என்று நல்லாப்பிள்ளை பாரதம் கூறுகிறது. துரோபதைக்குக் கன்னன், கணவனாகும்—காதலனாகும் உரிமையுடையவன் என்பது தெய்விகத்திற்குத் தெரியும். தெய்விகத்திற்குந் தெரியாதெனின், காதலும் தெய்விகமானதே. அல்ல; உலக நிகழ்ச்சிகளும், தெய்விகமானவை யல்ல என்றுதான் சொல்ல வேண்டும்.

கன்னனைக் காதலித்தாள் என்ற காரணத்தினால், துரோபதையைக் 'கற்பிழந்தவள்' என்று கூறுவதற்கில்லை. ஏனெனின், ஒரு வயிற்றிற் பிறந்த சகோதரர்களை ஒருத்தி ஏற்று கற்புடையளாக வாழலாம் என்பதுதான் ஆரிய நாகரிக மாயிற்றே! இக் கருத்தை விரிவாகக் காண விரும்புவோர், திரு. மறைமலையடிகளாரின் 'தமிழர் மதம்' என்னும் நூலிலே காண்க.

ஒருத்தி, தன் காதலன் ஒருவனையே தெய்வமாகக் கொண்டு, கற்பு நெறியோடு வாழ்வது தமிழர் நாகரிகம். இந்தத் தமிழர் நாகரிகமே சிறந்தது என்று கண்ட ஒரு சிலர், தம் பழைய நாகரிகமாகிய ஒருத்தி பலரை மணப்பது போன்ற தீய ஒழுக்கங்களை விட்டுத் திருந்தி யுள்ளார்கள் என்பது ஒவ்வொரு தமிழனும், தமிழ் நாட்டவனும் நினைந்து, பெருமை கொள்ளக்கூடிய தாகும். ஆகவே, ஆரிய நாகரிகத்தைத் தம் நாகரிகமாகக் கொண்டு, தமிழர் வருந்துவதில்—புழுங்குவதில் பயனில்லை.

மேனாட்டு நாகரிகத்திலே—ஒரு பெண் பலரைக் காதலிக்கலாம் என்று இருந்தால், அதைக் கண்டு பெண்களுக்கு மாசு ஏற்பட்டுப் போயிற்றே என்று சொல்வதற்கில்லை; அதுதான் அவர்களின் தாராள தலை சிறந்த நாகரிக மாயிற்றே! அந்த நாகரிகத்தையும், தமிழர் நாகரிகத்தையும் ஒத்திட்டுப் பார்ப்பது வீண் தானே! எந்த நாகரிகத்தால் எந்தப் பெண் எப்படி கற்பிழந்தாலும், அது தமிழர் பெண்ணுலகை மாசுபடுத்திய தாகாது என்பது எங் கொள்கை,

கன்னனை விரும்பிய இதயத்தைப் 'பேரிதயம்' என்று, துரோபதை கூறிக்கொண்டது ஓர் காரணம் பற்றியே. ஓர் இதய மலரில் ஒரு காதல் நாயகனே இருக்க உரியன்; தன் இதயத்தில்

அவள் ஐவருக்கு இடந்தர வேண்டிய நிர்ப்பந்தம் ஆரிய நாகரிகத்தால் ஏற்பட்டது. ஏற்பட்டும், கன்னனுக்கும், மேலும், தன் இதயத்தில் விசாலமான இடம் இருப்பதாக அவள் வாக்கு, 'இன்னம் வேறொருவன் எம்பெருங் கொழுநன் (கணவன்) ஆவதற்கு உருகும்' என்று தெரிவிக்கிறது. ஆகவே அறுவருக்கு ஓர் இதயம், இடங் கொடுக்குமானல், அந்த இதயம், பேரிதயம் என்று கூறப்படாமல், வேறு எப்படித்தான் கூறப் படலாம்?

அதனால்தான் அவள், தன் இதயத்தைப் பேரிதயம் என்று ஒத்துக் கொண்டாள், தானகவே. அப்பொழுதே, 'கன்னனும் பாண்டவரின் சகோதரனே' என்று அவளுக்குத் தெருந்திருந்தால், ஆரியரின் கொள்கைப்படி துரோபதையின் இதயம், 'அள்வான' இதயம் என்றுதான் சொல்லியிருப்பாள். கன்னன்தான் அலாதிப் பேர்வழி என்று நினைத்துக் கொண்டிருந்தாளே! அலாதிப் பேர்வழிக்கு இடங் கொடுக்கும் இதயத்தை பேரிதயம் என்று ஒத்துக் கொன்டது, துரோபதையின் உளத் தூய்மையை விளக்குகிற தல்லவா?

இந்த உளத்தூய்மையைத்தான் ஆரியர் 'கற்பு' என்று கொண்டனரோ! 'அருந்ததி போன்றவள், துரோபதை' என்று கூற என்ன காரணம், வேறு இருக்க முடியும்? அல்லது ஆசிரியர் அப்படிக் கூறியதற்கு ஆரிய நாகரிகக் கற்பு முறைக்குச் சிறிதும் வழுவாமல் கன்னனைச் சேர்த்து ஒரு வயிற்று அறுவரை உளங் கொண்ட—வரம்பு கடவாத தன்மையைத்தான் காரணமாகக் கூறவேண்டும்! இல்லையா?

இக் கொள்கை தவறெனின், ஆரியர் நாகரிகம் தமிழர்களுக்கும் ஓர் வகையில் உடன்பாடு என்றுதான் பொருள்படும்; ஆழ்ந்து நோக்குக.

எனவே, இந்த முறையில் மேற்கூறிய செய்யுளுக்குப் பொருள் கூற முற்படின், அன்பர்-துரை கூறிய உரையும், கடற்கரையில் நாம் கண்ட தமிழ்ப்புலவர் கூறிய உரையும் கருத்து மாறுனவை என்று புலப்படும். நாங்கள் கூறும் உரை பின் வருமாறு:-

'வசிட்ட முனிவனின் நல்ல தரும பத்தினியாகிய அருந்ததியை ஒத்த துரோபதை, 'இறைவனே! (அன்பர் துரை, ஐம்புலன் என்பதற்கு மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளைப் பொருளாக மயங்கிக் கூறியுள்ளார். ஐம்பொறிகளால் அறியக் கிடப்பன ஐம்புலன்கள்.) மக்களுக்குக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று (சுவைகளின் வகை) அறியும் ஐம்புலன்கள்போல், எனக்குப் பாண்டவர் ஐவரும் தலைவர்களாக இருக்கவும் (ஐந்து பொறிகளாலும் ஐந்துவித சுவைகளை-அதாவது புலன்களை அனுபவிப்பதுபோல் இந்த ஐவரிடத்தும் ஐந்து விதமான சுவைகளைக் காண்கிறேன். கண்டாலும் அதோடு திருப்தியடைய முடியவில்லை என்கிருள், திரோபதை. காரணம், தெய்விகமே அவளுரிமையை அவளுக்குச் சேர்த்துவிட பாடுபடுகிறது போலும்.) மற்றும் ஒருவன் (கன்னன்) எனக்குக் கணவனுக வேண்டுமென்று என் பெரிய உள்ளம் நினைந்து உருகுகின்றது. ஏனென்

ருல், இந்த அழகிய பூமியில் பெண்ணாய்ப் பிறந்தவர் யாருக்கும் காதலன் என்பவன் ஒருவன் உண்டு. ஆதலால், பெண்கள் யாரிடமும் காதல் வையார் என்று நம்புவதற்கு என்ன இருக்கிறது? என்று கூறினாள் என்பதாம்.

[ஆடவன்=ஆண் தன்மையில் சிறந்தவன். ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒவ்வொருவர்தான் ஆண் தன்மையில் சிறந்தவராகக் காணப்படுவர். அங்ஙனம் காணப்படும்போதுதான் பெண்கள், காதல் வைக்க முடியும். ஓர் பேடியைக் கண்டு காதலித்ததாக எங்குங் காணோம். 'ஆடவர்' என்ற சொல்லைத் துரோபதை, 'காதலர்' என்ற பொருளில் உபயோகித் துள்ளதைக் காண்க. இலாமையின் அல்லால்=இருப்பதால்; வராமல் போகான்='வருவான்' என்பது போலப் பொருள் கொள்க.]

இதனால், மணமான ஒவ்வொருத்திக்கும் ஒவ்வொரு காதலன் இருப்பான் என்பதில்லை. ஒவ்வொரு பெண்ணுக்கும் காதலன் யார் என்று அறிந்து அந்தக் காதலனுக்கே மணமுடித்துத் தருவது உசிதம். இந்த உசிதமான கொள்கைதான் பழந்தமிழருடையது. காதலனே கணவனானால் காதலிக்குக் கண் வேறிடஞ் செல்ல நேரிடுமா? அதனால்தான் தூய வாழ்க்கை வாழ்ந்தார்கள் தமிழர்கள். இப்பொழுதுதான் தூய வாழ்க்கை என்பது அபூர்வமாய்ப் போய்விட்டதே!

இச்செய்யுளுக்கு இப்படிப் பொருள் கொண்டாலொழிய மரத்தில் பழம் பொருந்துவதற்கு நியாயமில்லை. ஏனென்றால், உள்ளத்தில் உள்ளதை, உண்மையாக உரைக்க வேண்டிய விடத்தில் 'என் அப்பன் குதிருக்குள் இல்லை' என்பது போல, 'யான் வேறொருவனை விரும்புவேனோ?' என்று எதையோ உளறினாளானால் துரோபதை, பழம் மரத்தில் போய் எப்படி ஒட்டிக் கொள்ளும்? ஆகவே உள்ளத்தில் இருந்த 'மறை'யைத் துரோபதை கூறிவிட்டாள்; பழமும் மரத்தில் சென்று ஒட்டிக் கொண்டது.

திருத்தக்க தேவரும், குமரகுருபர சுவாமியும் பெண்களை இழித்துப் பாடியதின் இரகசியம் வேறொன்றும் இல்லை; ஆரிய நூல்களிலும், சம்பிரதாயங்களிலும் அவர்கள் அதிகம் இலயித்துப்போய்க் கிடந்தார்கள்; தமிழ்ப் பெண்களின் ஒழுக்க நெறியை மறந்தார்கள்; அன்பர்—துரை கூறுவதுபோல் மனம் போனபடி, போலிக் கொள்கைகளைத் தம் நூல்களில் விளாசிக் கட்டிவிட்டார்கள். குமரகுருபரர்தான் வடநாட்டிற் சென்று வாழ்ந்து வந்தவராயிற்றே; அந்த ஓதம், அவருக்கு உறையாமல் போய் விடுமோ! ஏன்? இப்போதுள்ள சில பிரபல தமிழ்ப் புலவர்களே—இந்த இருபதாம் நூற்றாண்டில்—ஆரிய மோகம் உடையவர்களாயிருக்கும்போது, ஆரியர் ஆதிக்கம் தமிழ்நாட்டில் மிஞ்சியிருந்த காலத்தில் புலவர், ஆரிய மோகங் கொள்ளாமல் இருந்திருக்க முடியுமா?

தெய்வத் திருவள்ளுவனார் இயற்றிய செழுந்தனித் தமிழ் மறையிலே பரத்தையரைப் பற்றிக் கூறும்போது, 'ஒரு தலைவனுக்குப் பரத்தையாய் அமைந்தவள், மற்றொருவனின் மனைவி!' என்று, எங்கும் குறிப்பாகக் கூடக் கூறினாரில்லை. ஆதலின்,

# என் பிரார்த்தனை

("வீரசக்தி")

தூவிப் பறக்கும் தூற்றல் துளிகளினூடே திரிந்து ஒரு இளந்தென்றல் காற்று சில்லென என்னைத் தழுவியதுதான் தெரியும்—நான் என்னை மறந்தேன். இல்லை. நான் என்னையே மறந்து விட்டால் என் பக்கலிலே கிடந்த நாற்காலியில் அன்னநடை நடந்து என் உள்ளத்தையே விலைக்கு வாங்க வந்தவள்போல், அவள் அமைதியுடன் வந்து உட்கார்ந்த அதிசயத்தைக் கண்டிருக்க முடியுமா? அல்லது கணீர் என்று மணியடித்தது போல் அளவற்ற அமுத வார்த்தைகளை அவள் பேசியவற்றைத்தான் நான் கேட்டிருக்க முடியுமா? ஆம். நான் என்னையே மறக்காது அவளையே உற்றுநோக்கிக் கொண்டிருந்தேன்.

இதுவெல்லாம் அவ்வளவு ஆச்சரியப்படக்கூடிய விஷயமல்ல. ஆனால் அவள் சொன்ன ரத்தினச் சுருக்கமான பொருள் செறிந்த சொற்களைத்தான் என்னால் அளவிட முடியவில்லை. **இயேசுவின் தர்மத்தை மறந்து போரிடும் இவ்வுலகத்தின் மேல்** தான் அவளுக்கு எவ்வளவு பரிதாபம் தெரியுமா? **உலகின் எதிர்காலப் பாதுகாப்புக்கு** எத்தனை வழிகள் கூறுகின்றாள்? **அரசியல் நிபுணர்களுக்குங்கூட** வழிகாட்டும் வன்மை அவளுக்கு உண்டென்பது தெரிகின்றது. ஆஹா, **காவியங்களை அழிக்கப்புகும் நண்பர்**களுக்கு அவள் அறிவு புகட்டுகிறாள். **தேசீயப் பற்றுத்தான்** அவளுக்கு இன்ன அளவிற்றென்று இருக்கிறது என்பதில்லை. **மகாத்மா மாதவ முனிவர்** என்று அடிக்கடி கூறுகின்றாள். **கல்வி வளர்ச்சியே நலந்தரும்** என்று எவ்வளவு உருக்கத்துடன் கூறினாள் தெரியுமா? **'பேரறிஞரைப் போற்றுக'** என்று புகட்டினாள்.

நான் பிரக்ஞை கொண்டவன் போல் நிமிர்ந்தபடியே விழித்த கண்ணோடு உட்கார்ந்து கேட்டுக்கொண் டிருந்தேன். அவள் சிறிது என்னை உற்று நோக்கிவிட்டு மறுபடியும் சொன்னாள். பழந்தமிழிலக்கியத்தின் இனிய கற்பனைக் கவிகள் பலவற்றை எவ்வளவு இன்பமாக எடுத்து வருணித்தாள் தெரியுமா? அப்படியே கற்பனா உலகத்திலே சஞ்சரிப்பது போலிருந்தது அவள் கூறும்போது. "கரும்பின் வெற்றி, குற்றாலப்பவனி, தலைவன் படும்பாடு, கார்தங்கி நின்றகொடி", என்று பெயரிட்டுக் கொண்டு தமிழின் சுவையை அப்படியே எடுத்துக் கொடுப்பது போல் பிரசங்கித்தாள். இப்பொழுதே வாசகசாலைக்குச் சென்று தமிழ் இலக்கியங்களையெல்லாம் எடுத்து உடனே படித்துவிட வேண்டும் என்றுகூட எனக்குத் தோன்றி விட்டது.

போகட்டும் தமிழ் இலக்கியத்தில் இவள் கைதேர்ந்தவள் என்று மட்டும் முடிவு கட்டி விடலாம் என்றால் முடிகின்றதா? விவாதம் செய்வதிலே

---

பரத்தை என்பவள், 'பொதுமகள்', 'விலைமகள்' என்று அறியக்கிடக்கின்றது; எனினும், அந்தப் பொதுமகளிரும், விலைமகளிருங்கூடத் தமிழ்நாட்டில் ஒருவனையே பெரும்பாலும் அணைந்திருந்தார்கள் என்று பிற தமிழ்நூல்களும், திருக்குறளும் வெளிப்படையாகப் பல விடங்களில் விவரிக்கின்றன. இந்த காரணங்களாளெல்லாம், பிற்காலத்தி லெழுந்த—ஆரிய நாகரிகத்தைக் குறிக்கும் தமிழ்ப்பாடல்களிலுள்ள—பெண்களைத் தாழ்த்தியுரைக்கும் கருத்துக்களைக் கொள்வதற்கில்லை என்று முடிக்கிறோம்.

அதிகமாகத் தேர்ந்தவள் என்று அவள் செய்த விவாதத்திலிருந்தே தெரிந்து விட்டது. தோழர் டி. கே. ஸியின் நடையைப் பற்றிக் குணமும் கூறுகிறாள்; குற்றமுங் கூறுகிறாள். எந்த வகையிலும் அவள் பேச முடியும் போலும். "எதை எரிப்பது" என்று கம்ப ராமாயணத்தை எரிக்கக் கூடாது என்று சரியான காரணங்களுடன் விவாதிக்கிறாள். அவள் அறியாதது இனி வேறொன்றும் இல்லை என்றுதான் முடிவு கட்ட வேண்டிய திருக்கிறது.

காதற் கதைகள், காதற் கவிகள், சரித்திரக் கதைகள், புதுமைப் பாடல்கள், கற்பனைச் சித்திரங்கள் எல்லாம் அவளுக்குத் தண்ணீர் பட்ட பாடுதான். அவள் சொல்லும் போதுதான் நான் என்னையே மறந்து விடும்படி வந்து நேர்ந்ததே யொழிய, தென்றல் என்னை ஒன்றும் செய்துவிட வில்லை. இருந்தாலும் இவளுக்கு இவ்வளவு திறமை எங்கிருந்துதான் அகப்பட்டது? தமிழ் நாட்டின் திறமையெல்லாம் ஒருங்கு சேர்ந்து இவளிடம் பிரதிபலிக்கிறது என்றே அலறிவிடலாம் என்றுகூட எனக்குத் தோன்றுகிறது.

விஞ்ஞானம், அரசியல், இலக்கியம், விவாதம் இந்த உலக வியாவகாரங்களில் மட்டுமல்ல; ஆத்மார்த்திகமான ஞானமார்க்கத்திலும் இவள் வல்லவள் என்பதற்குச் சந்தேகமே யில்லை. உலகத்தை வெறுத்து உலவும் ஞானமங்கையோ இவள் என்றுதான் சந்தேகப் படலாம். இந்த அழகி ஏன் ஞான முதிர்ச்சி பெற்று மாயையை விட்டு விலக எத்தனிக்கிறாள் என்று பரிதாபங்கூட நமக்கு ஏற்பட்டுவிடும். "இவள் என்றும் என்னிடமே இருக்க வேண்டும். இந்த உலக மாயையிலே சிக்குண்டு என்னுடன் இன்பதுன்பங்களை அனுபவிக்க வேண்டும். இறைவா! இவளுக்கு பாரமார்த்திக ஞான மேற்பட்டு உலகை வெறுத்துவிடக் கூடாது" என்று என் மனதிற்குள்ளேயே பிரார்த்தித்துக் கொண்டேன். அப்போது அவளின் வதனத்திலே தோன்றிய மோஹனப் புன்னகையைக் கண்டவுடன் தான், "ஆஹா, இவள் நம்மை விடவே மாட்டாள், நான் வெறுத்தாலும், அவள் என்னை வெறுத்துவிட மாட்டாள்போற் தெரிகின்றது" என்று எனக்கு நம்பிக்கை பிறந்தது.

இவ்வாறு எண்ணிக் கொண்டிருக்கும் போதே வைத்தியம், சோதிடம், ஆசனப் பயிற்சி முதலியவற்றை எடுத்துக்கூற ஆரம்பித்து விட்டாள்? எனக்குச் சந்தேகம் வந்து விட்டது! "இவள் மானிட மங்கையல்ல, தேவ மங்கையோ என்னவோ? அதனால்தான் இவளுக்கு இவ்வளவு தெரிகின்றது" என்று எண்ணிய என்னைக் கன்னத்தில் அறைவது போல் "ஹஹ்ஹா" என்று சத்தமிட்டுச் சிரித்தாள். "நான் மானிட மங்கைதான்" என்று ஓலமிடுவதுபோ லிருந்தது அவளின் சிரிப்பு. ஆனால் ஏன் பூமாரி பொழிய வேண்டும்? சலசல வென்று மேலிருந்து எங்கள் இருவர் மேலும் உதிர்ந்தது.

அடடா, பூக்களல்ல, மழை பலமாக நான் உட்கார்ந்திருந்த ஜன்னல் வழியாக என் மேல் விழுந்துகொண் டிருந்தது. அப்போதுதான் நான் என்னுடைய அறையின் ஜன்னலின் பக்கத்திலே உட்கார்ந்து கொண்டு "ஆனந்தபோதினி"யின் 28-வது தொகுதியைப் படித்துக்கொண் டிருக்கும் போதே கற்பனையில் சஞ்சரித்து விட்டேன் என்று தெரிந்தது. ஆனந்த போதினித் தொகுதியின் மேலேகூட மழைத்துளி விழுந்து புளகாங்கித மடையச் செய்து விட்டது. உடனே உள்ளே சென்று முழங்காலிட்டு, "இறைவா, தமிழ்நாட்டிலே தமிழர்களுக்கென்று நடந்துவரும் ஆனந்தபோதினியை மேன்மேலும் வளரச் செய்வாய்!" என்று பிரார்த்தித்தேன்.

# 'கணேசனின் தாயார்' கதை முடிவு

"கணேசனின் தாயார்" என்ற கதையைப் படித்த போது என் மூளையும் குழம்பி விட்டது. அக் கதையைப் போல் நானும் எத்தனையோ உண்மை நிகழ்ச்சிகளை எங்கள் ஊரிலேயே நேரில் கண்டிருக்கிறேன். ஆனால், திரு. சி. குழந்தைசாமி கூறுவதைப் போல, வறுமையைச் சித்திரித்து அதன் மூலம் சமூக ஊழலைக் காட்டுவதற்காக ஒருத்தி, "உயிரினும் சிறந்தது கற்பே!" என்ற தமிழர் நெடுங்கால வழக்கத்தைச் சிதைத்துத் தன் நாணத்தையும், மானத்தையும் ஒருங்கே, காற்றில் பறக்க விட்டுத் தன் கற்பை விலைப்படுத்திய கீழ்ச்செயலை அடிப்படைப் பொருளாகக் கொள்ள நான் சம்மதிக்க மாட்டேன்.

"சிறு கதை"யின் இலக்கணத்தைத் திரு. சி. கு. சாமி நன்கு உணர்ந்து இருந்தாலும், அதனைக் கையாளும் திறம், 'நீரில் விழுந்துள்ள மரத்தின் நிழலின் உச்சியை நாடுவோன் திறத்தையே ஒத்ததாய் உள்ளது.

திருவிளையாடலிலே, மாபாதகம் தீர்த்த சருக்கத்தின் உட்கருத்தும், தாராசசாங்கக் கதையின் கருத்தும், நம் நடைமுறையில் சில் பல கயவர்களால் நடத்தப்பெறக் காண்கிறோம். அக் கதைகளே அக் கயவர்கட்கு ஆதாரமாய் அவர்கட்குத் துணிவு தருகின்றன. தாயைப் புணர்ந்த சண்டாளப் பதருக்கும் கடவுள் அருளுகின்றார் என்ற கதையைக் கேட்கும் (100-க்கு 87-பேர் படிப்பில்லாத மக்கள் உள்ள நம் தமிழகத்தில்) சிந்தனையற்ற பாமரர்களில் பலரும் கடவுள் நாமத்தை உச்சரித்துக் கொண்டு பாபத்தொழிலைச் செய்யத் துணிவார்களே அன்றி, அப்பாதகனின் அறியாமைக்குச் சமூகமே காரணம் என்று சிந்திக்க மாட்டார்கள். அது போலவே, வறுமையினால் கணேசனின் தாயார் கற்பிழந்து தன் மகனை மேலும் படிக்க வைத்தாள் என்ற இக் கதையைக் காணும் அன்பர் 'வீரசக்தி' போன்ற சிந்திக்கும் சக்தியுடையோரே சமூக ஊழலைக் காண முயலுவர் அன்றிச் சிந்தனைச்சக்தி யற்றவர்களோ, விதண்டாவாத வீண் நினைவு கொண்டு மிகவும் எளிதாகக் கெடுவார்களே அன்றிக் கற்பைக் காப்பாற்றிக் கொள்ளத் துணிய மாட்டார்கள். இது திண்ணமாம்.

மற்றும், இக் கதைக்கு முடிபுகள் பலவழியில் சமூகக் கொடுமையைச் சித்திரம்போலக் காட்டிச் சீர்திருத்தம் செய்திருக்கலாம். உதாரணமாகச் சில முறை காட்டுகிறேன். தாய், கற்பிழக்கச் சம்மதித்துச் செல்லுங்காலை, அந்தக் கணேசனே, "அப்பண்ணையார் கூறிய சொற்களையே சற்றாராய்ந்து, தாயின் கற்பைக் கெடுக்கவே அவன் வரச்சொல்லி இருகிறான் என்பதை யுணர்ந்து, தாயைக் கொடிய தொழிலுக்குப் புகுத்தாமல் காத்திருக்கலாம். அதனால், தாயின் கற்பிற்காக, கணேசன் தன் வாழ்நாள் முழுதும் துன்பம் உற வரினும் துணிவாற்றி இன்பம் பயக்கும் கற்புடைய வாழ்வைக் கைக்கொண்டு படிப்பைத் தியாகம் செய்திருப்பதாக முடித்திருக்கலாம். "ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை!" என்ற குறளுக்கு இலக்கியமாய்க் கணேசன் மாறி யிருக்கலாம். ஏன் எனில் கணேசன் 10-வது வரை படித்துள்ள அறிவாளி எனப்படுவதால்.

இன்றேல், கணேசனும், அவள் தாயும் ஒருங்கே உலகையும் சமூகத்தையும் வெறுத்துத் தற்கொலை செய்து கொண்டனர் எனக் கூறி அதன் வறுமை நிலைக்குக் காரணமாகிய சமூக ஊழலை வெளி யிடலாம்.

இத்தகைய வழிகளை விடுத்து, ஆசிரியர் அவ்வாறு எழுதிய கதையை எப்படி வரவேற்க முடியும்? திரு. சி. கு. சாமி தாம் எழுதிய மறுப்பில், ஆண்களும் கற்புடன் இருக்க வேண்டும், என்பதையும், சமூக ஊழலை

ஒழித்து யாவரும் சம இன்பம் அனுபவிக்க வழிசெய்ய வேண்டும் என்ப தையும் வரவேற்கிறேன்.

—மா. தேவராசன்.

## 2

காந்திமதி கற்பரசியென விளங்குமாறு முற்பகுதியிலும் ஈற்றில் கற்பைச் சிதைத்ததாய்க் கருதும்படிக்கும் ஆசிரியர் முடித்திருப்பது பரிதா பத்தோடு திடுக்கிடும் நிலையை உண்டாக்கும். கற்பனை உலகில் நடந்த கதையை கற்பை இழக்காமல் பூர்த்தி செய்ய ஏதுவில்லாம லில்லை. இக் கதையைப் பின்வருமாறு முடித்திருக்கலாம்.

பண்ணையார் வீட்டுக்குச் சென்ற காந்திமதி சுமார் இரவு 7-மணிக்கு அவரைக் கண்டு வணங்கி நின்றனள். வெகு காலமாக காந்தியின் விரக வேட்கையில் வாடியிருந்த பண்ணையார் அவளை நோக்கி, 'பெண்மணி இங்கமரு, ஏன் நிற்கின்றனை?' என்றார்.

காந்திமதி சிறிது யோசித்து, 'ஐயா! இங்கமரும் யோக்கியதை என் னிடத்திலில்லை, நான் மிகவும் பரம ஏழை—நீங்கள் வரச் சொன்னதாகக் கணேசன் கூறினான். கருணைகூர்ந்து நீங்கள் வாக்குறுதி யளித்தபடி பணம் தந்தால் நலமாயிருக்கும்.'

ப:—ஏன் உனக்கு இவ்வளவு சந்தேகம்? வேண்டுமானால் இப்போதே தருகிறேன். இதோ பார்! இதில் பத்து ரூபாய் நோட்டுகள் பத்து இருக்கின் றன; எண்ணிப் பார்த்து வைத்துக் கொள்.

"ரூபாய் நூறு சரியாயிருக்கிறது. மிகவும் உபகாரம். நமஸ்காரம். நான் போய்வருகிறேன்" என்று பணிந்தெழுந்து பண்ணையார் வீட்டை விட்டு காந்திமதி வெளியில் வந்துவிட்டனள். பண்ணையார் வெகுண்டு ஆச் சரியத்தோடு பின் தொடர்ந்து தெருவாசற்படியண்டை வந்தார். காந்திமதி பண்ணையார் திருஷ்டிக்கு அகப்படவில்லை. அதே சமயம் அங்கே ஓர் மோட் டார் வந்தது, அவற்றை உற்று நோக்கினர். மோட்டாரிலிருந்து அவரது நண்பரிருவர் அவரை வந்து சந்தித்தனர். அவர்களுடன் பண்ணையார் பேசாதிருக்க முடியுமோ? பேசி உபசரித்து வீட்டுக்குள் அழைத்துச் சென் றனர். காந்திமதியின் ஞாபகம் அவர் இதயத்திற் றங்க இடமின்றி அவ் விடத்தில் வெட்கம் வந்து உறவாடின. காந்திமதியைப் போர்த்திருந்த அவ ளது கற்பெனும் போர்வை அவள் தேகத்தைப் பண்ணையார் தீண்டவொட் டாமலும், வரும் வழியில் ஒருவர் கண்ணிற் றென்படாமலும் தடுத்து அன் றிரவு சுமார் மணி 10-க்கு அவளது இல்லத்திற் கொண்டுவந்து சேர்த்தது.

பரதாரத்தை இச்சித்த பாதகர், செம்மையிலறஞ் செய்யாதார், திரவி யம் எவரால், எவ்வகையிற் சிதறிடினும் குற்றமுண்டா? ஆயினும் பூவுடன் சேர்ந்த நாரும் மணம் பெற்றாற்போல் கற்பரசியின் தியாகத்தால் பிறர் மனை விரும்பிய பெரும்பாவியின் பொருள் நல்வழிக்குப் பிரயோஜனமா யிற்று. காந்திமதியைப் போல் உண்மையான உள்ளன்போடு மன முருக வழிபடும் மாந்தர்க்கு அன்புபூண் டொழுகா அறக் கடவுள் எங்ஙனமுளார்?

—மு. சு. ஆதிமூலன்.

## 3

"கணேசனின் தாயார்" என்ற சிறு கதையினைத் தமிழ் மகளிர் படித் துப் பார்த்து நகைத்திருப்பர். "பெண்மைக் கிழைத்த பெருந்தீங்கு" போற்றத் தக்கதல்ல!.........தமிழ் மகளிருக்கா இந்த அவமானம்.........? வேண்டாம்......! வேண்டாம்......! இனியாவது அறிவை நன் முறையில் பயன் படுத்துக! பயனடைக.........!

—மதி. ரா. நமசிவாயம்.

# விஞ்ஞானம் கிளைத்தல்

(டி. பி. நவநீதகிருஷ்ணன், M. A.,)

சரித்திர காலந் தொட்டு, மக்கள், தம் உணவுக்கெனவான பொருள்களை, இரு விதங்களாய்ப் பெற்று வந்தனர். அவை, உணவுப் பொருள்களை சேகரித்துப் பெறுதல், அவற்றை, வேட்டையினின்று பெறுதல், என்பனவாம். பண்டைக்காலத்து மக்கள், காய்-கனி-கிழங்குகள்-முட்டைகள்-மீன்கள் இறைச்சி என்பவற்றைப் புசித்து வந்தனர். காய், கனி முதலானவை தேடியலைந்து சேகரிக்கும் வழியே பெறப்படுகின்றன. இறைச்சி, வேட்டையாடுவதினின்று கிடைப்பது. காய், கனி, இன்னோரன்னவை பல வகைப்பட்டவாருனவை. அவற்றில், சில வகையினவே உண்பதற் குகந்தவை. நச்சுப்பட[illegible]ான பலவும் உள்ளன. ஆதலின், அக் காலத்து மக்கள், இரையாகக் கொள்ளக்கூடியவை எவை என்பதையும், இரையெனப் பயன்படாதவை எவை யென்பதையும், நன்மையானவை எவை என்பதையும், தீமையானவை எவை யென்பதையும் அறிதல் இன்றியமையாத தாயிற்று, எனவே, இத்தகையதான பகுத்தறிவில், அவர்கள் தேர்ச்சி யடைந்தவ ராயினர். அவ்வாருன வழிகளில், அவர்கள் பயிர்களின் தரா தரம் அறியும் முகத்தான் திரட்டியதான அறிவு, இன்றையதான தாவர நூல் எனும் விஞ்ஞானப் பகுதியின் பாற் பட்டதாம், இறைச்சியைப் பெறுதற்கென, விலங்குகளை வேட்டையாடினமையின், அவ் விலங்குகளைப் பற்றினதான விஷயங்கள் பலவற்றை, அவர்கள் அறிய லாயினர். அவ்வாறு அவர்களுக்கு வாய்த்ததான அறிவு, இன்றையதான ஜந்து நூல் எனும் விஞ்ஞானப் பகுதியில் அடங்கி யுள்ளது. 'முட்டைகள் வசந்த காலத்தில் அதிகமாய் அகப்படும்; இலையுதிர் காலத்தில், கனிகள் மிகுதியாய்க் கிடைக்கும்,' என்றவற்றைக் கண்டதினின்றும், இன்னும் பல்வேருன தோற்ற மாறுபாடுகளைக் கவனித்ததினின்றும், அவர்கள், பருவ காலங்களைப் பற்றி அறியலாயினர். நிலவு பரந்திருந்த இரவுகளில், மீன் பிடிப்பதற்கென, அவர்கள் சென்றனர். ஆதலின், வளர்பிறை, தேய்பிறை இன்னோரன்னவையான அறிவையும் அவர்கள் பெற லாயினர்.

இங்ஙனம், ஆரம்ப காலத்து மக்களின் அன்ருட வாழ்க்கை நடத்தப் படுதற்கெனவே, பல துறைகள் பாற்பட்ட அறிவு, இன்றியமையாத தாயிற்று. நில நூல், கனி நூல், ஜந்து நூல், தாவர நூல், வான நூல் என்பனவற்றின் பாற்பட்டதான அடிப்படை யறிவு, பண்டைக்காலத்து மக்களது வாழ்க்கையுடன் தொடர்புற்றிருந்தது. மேலும், அவர்கள், பெரும் விலங்குகளை வேட்டை யாடினர் எனவும், அவ்வாருன வேட்டைக்குப் பலரின் ஒத்துழைப்பு அவசியமானது எனவும், மக்கள் உற்பத்தி நூலறி

ஞர் விளக்கி யுள்ளனர். அவ்வாருன வேட்டைகள் மீது சென்ற போது, பல குடும்பங்களி லிருந்தவர் ஒன்று கூடியே, அவ் வேட்டைக்ளி லீடுபட்டனர் எனவும் மக்கள் நூலறிஞர் கூறுகின்ற னர். அதனுல், பல குடும்பங்க் ளாலான குழுக்கள், அக்காலத்து சமூகத்தில் இருந்திருக்க வேண்டும் என, அவ்வறிஞர் எடுத் துரைக்கின்றனர்.

பண்டைக்காலத்து மக்களிடை, மருத்துவ வியலான அறி வும் கொஞ்சம் பரவி யிருந்தது என்று எண்ண இடமுண்டு. அவ் வாருன அறிவை அவர்கள் பெற்றிருந்தனர் என்பதைக் காட்டு கின்றவையான சான்றுகள் உள. மக்கள் உற்பத்தி நூலறிஞர் தம் ஆராய்ச்சி முக்த்தான் கண்டு பிடித்தவற்றினின்று, இறந் தவர்களை, அக்காலத்து மக்கள், தாம் வாசித்து வந்தவையான குகைக்ளிலிருந்த கணப்புத் தீயானதின் அருகிலான இடங்களில் புதைத்து வந்தனர் என்பதைக் காட்டுகின்ற அறிகுறிகள் கிடைத் துள்ளன எனக் கூறுகின்றனர். அவ்வறிஞர் கூறு கின்றவற்றினின்றும், பின்வருவனவற்றையும் அறிகின்ருேம். 'புதை யுண்டனவான சவங்களின் மீது, மண்ணுங்கட்டிகள் விழுந்து, அவற்றை அழுத்தி விடாதவாறு தடுப்பதற்கென, அம் மக்கள், கற்கட்டிடங்களை யமைத்தனர். இறந்தோர்க்கு, கற் களைத் தலையணையாய்த் தந்தனர். அவர் பக்கத்தில், உணவை யும். கருவிகளையும் வைத்தனர். இதைப்பற்றிக் கருதுங்கால், அப் பண்டைக்காலத்தினர், உயிரும் வெம்மையும் இணையானவை என்றெண்ணினமையின், சூடு வுறைத்து, இறந்தவர் பிழைத் தெழுவர் என நம்பி வந்தனர் என ஏற்படுகின்றது. இறந் தோரைப்பற்றி இத்துணைக் கவலையைக் காட்டியவர், நோய் வாய்ப் பட்டவரையும், நன்கு கவனித்து வந்தனர் என, நாம் எண் ணலாமன்ருே? ஆதலின், நோயால் நலிவுற்றவர்க்கு, ஆறுதல் அளிப்பதான மருத்துவ முறையும், அக்காலத்தும், இருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம்.

இறந்தவரைப் புதைத்து வந்தவரான அக்காலத்து மக்கள், எவ்வகை யேனுமானதொரு மரணச் சடங்கைச் செய்து வந்தனர் என எண்ணலாம். மரண மென்ருனதொன்று ஏற்பட்ட பின்ன ரும், நிலைத்துள்ளதான தொன்றுண்டு என்பதான எண் ணமே, அவ்வாருன மரணச் சடங்கைச் செய்யுமாறு, அம் மக்களைத் தூண்டி யிருக்கவேண்டும். அவர்கள், அவ்வெண்ண மானவர் என, நாம் கருதுவோமாயின், கற்பனையின் பாற்பட்ட சிந்தனை யென்பதும், அவர்களால் இயன்ற தொன்றே யென்ற முடிவை அடைகிருேம். முரட்டு மக்களுங்கூட சிந்தனை செய்த னர் என்பதற்கான காரணம், மரணம் விளைவித்த அச்சமே எனலாம்.

'இறந்தோரைப் பேணுதல்' எனும் உருக்க மிக்கதும், பய னற்றதும், ஆன கருமம் மக்கள் அறிவு பெறத் தொடங்கிய

காலத்தினின்றே, ஏற்பட்டதான வழக்க மொன்ரும். இறந்த பின்னும், மறுமுறையான வாழ்வுண்டு எனும் நம்பிக்கையே, சமயத்திற்கு அடிப்படையான கருத்து எனலாம். மக்களில் அறிவு அரும்பிய நாள் தொட்டு, அவர் உள்ளத்தில் ஊன்றி வந்துள்ள கருத்து இது. 'சமயத்திற் கடிப்படையான இக் கருத்து, இன்ரே, நேற்ரே ஏற்பட்டதான தொன்றன்று; தொன்று தொட்டிருந்து வரும் ஒன்று' என்பதானது, சமயத்தின் பாற்பட்ட ஆராய்ச்சி களி லீடுபட்டவர்க்கு, முக்கியமான தொன்ருய்ப் பட்டாம். அதைப் பற்றி, அவர்கள் மேலும் மேலும் ஆராயலாம். இப்பொழுது, நம்மைப் பொருத்தவரை, வைத்தியச் சிகிச்சை யென்பதானது, பண்டைக் காலத்தும் செய்யப்பட்டு வந்தது என்பதை எடுத்துக் காட்டுவதான சான்று எனும் வகையில், மரணச் சடங்கின் பாற் பட்ட கருத்து, முக்கியமானதா யுள்ளது.

குறித்ததோர் ஆசாரத்தை யொட்டியே, இறந்தவர் புதைக் கப்பட்டனரென வானமையின், அக் காலத்திலேயே சம்பிரதாய மான மரணச் சடங்குகள் இருந்திருக்க வேண்டும் எனக் கருத லாம். ஆனல், அவ்வாருன சடங்குகளின் நோக்கத்தை யொட் டியவருன தெதுவும் நேரிடவில்லை: கூட்டேறியமையின், இறந்த வர் பிழைத் தெழவிலலை; ஊணருந்தவில்லை; வேலை செய்யவில்லை. ஆதலின், அவ் வகையான சடங்குகள் முதலானவை, வைத்தியச் சிகிச்சை போன்றவையான நிதர்சன விஞ்ஞானத்தினின்று, வேற்றியலானவையாய்ப் பிரிந்தன. அவை, கற்பனையை யூட்டும் வண்ணமாய் வளர்ந்தன. காவியம், இலக்கியம், நாடகம் இன்னோ ரன்னவற்றினுக்கு ஊற்றுக் கண்ணுகவுள்ளது கற்பனையே யாம்.

எனவே, தொன்மையான காலத்திலேயே, மக்கள் அறிவின் பாற்பட்டவை, இரு வேறுபட்ட வழிகளில் செல்லலாயின. வாழ்க்கை யெனும் மரத்தில், அறிவென்பது அடி மரமா யுள்ளது எனலாம். அதனின்று, விஞ்ஞானம், சமயம் என்பனவான இரு பெருங் கிளைகள் பிரிகின்றன. விஞ்ஞான மெனும் கிளையினின்று, அதன் பகுதிகளான வைத்திய நூல் வானநூல், இன்னோ ரன் னவை, சிறு சிறு கிளைகளாய்ப் பிரிகின்றன. சமயமெனும் பெருங் கிளையினின்று, காவியம், இலக்கியம், நாடகம் இன்னோ ரன்னவை சிறு சிறு கிளைகள் பிரிகின்றன. மக்கள் வாழ்க்கைக்கெனவான பல துறைகளும், அவ் வாழ்க்கை சிறப்புற நடைபெறுதற் கெனவே யானவை. எனவே, அவை யெல்லாமும், மக்களின் வாழ்க்கையுடன் தொடர்பு கொண்டுள்ளவாறு சிறப்புறலாமே யன்றி, தனிச் சிறப்பை நாடிச் செழித்தல் அரிதாம். அவை, மக் கள் வாழ்க்கையுடன் கொண்டுள்ளதான தொடர்பை யறுத்து விடின், மரத்தினின்று துண்டிக்கப்பட்ட கிளை யொன்ருனது, வாடி யுலர்ந்து அழிதல் போன்று சிதைவுறல், திண்ணம். மக்கள் வாழ்க்கையுடன் இயைந்தவாறு வளர்வதால், அவை செழிப்புறும்; வாழ்க்கையும் சிறப்புற்றதாகும்.

# பெண்* ★

("கவிப் பித்தன்")

"ஏ, பெண்ணே! நீ இறைவனுடைய சிருஷ்டி மட்டுமன்று, மனிதனுடையதுந்தான். அவன் தன் இருதயத்திலிருந்து வரும் எழிலால் உன்னைச் சிறப்பிக்கிறான். கவிஞர்கள் உனக்காகப் பொன்மயமான கற்பனை நிறைந்த நூல்களால் சல்லா நெய்கின்றனர். சைத்ரீகர்கள் உன் உருவத்தை நவநவமாக என்றும் இறவாத தன்மையில் தீட்டுகின்றனர். கடல்கள் முத்துக்களை, நிலக்குகைகள் பொன்னை, சரத்கால பூங்காவனங்கள் மலர்களைத் தருகின்றன, உன்னை அலங்கரிக்க, அழகுபடுத்த, அதிகச் சிறப்புள்ளவளாகச் செய்ய. மானிடனின் உள்ளத்திலுள்ள அவா பெருமையை (புகழை) உன் இளமையின்மேல் சொரிகிறது. நீ ஒரு பாதி பெண், ஒரு பாதி கனவு." —கவி தாகூர்.

பெண்ணின் பெருமைகளைப் பேசாத மொழி இல்லை. அவள் அழகைப் புகழாத இலக்கியமில்லை. ஏன்? அவள் அழகை, அவள் பெருமையைப் போற்றாத இலக்கியம் உண்மையில் இலக்கியமாகவே இருக்க முடியாதே! கவிஞர்கள் உலகிலுள்ள அழகிய பொருள்கள் ஒவ்வொன்றுடனும் அவள் அங்கங்களை ஒப்பிட்டுப் புகழ்வார்கள். இந்த விஷயத்தில் ஒரு பாஷைக் கவிஞனுக்கும் மற்றொரு பாஷைக் கவிஞனுக்கும் மிகுந்த ஒற்றுமை உண்டு. கம்பனும் காளிதாசனும், ஹோமரும் வர்ஜிலும், ஷேக்ஸ்பியரும் விக்தர் ஹியூகோவும் இதில் ஒன்று. ரோஜா மலர்கள், ஆப்பிள் பழங்கள் அவள் கன்னங்கள்; மேகம் அவள் கூந்தல்; மின்னல் அவள் இடை; சந்திரன் அவள் வதனம்; இளம்பிறை அவள் நெற்றி; இந்திரவில் புருவம்; மல்லிகை மொக்கு நாசி; நீலோற்பலம் கண்கள்; குமுதம் வாய்; முத்து பற்கள்; வலம்புரி கழுத்து; செங்காந்தள் உள்ளங்கை; கரும்பு தோள்கள்; தாமரையின் குவிதல்; இளநீரின் திரட்சி இவை கொங்கைகள்...... இப்படியே புலவன் வருணனையை அடுக்கிக்கொண்டு போகலாம். இந்த வருணனை ஒருவன் சொத்தல்ல; எல்லா நாட்டானுக்கும் பொது. 'பந்தினை இளையவர் பயிலிடம் மயிலூர் கந்தனை யனையவர் கலை தெரி கழகம்' என்று அழகுக்கலை பயில்வதற்குப் பெண்கள் பந்து விளையாடுமிடத்தை இளைஞர்களுக்கு சிபாரிசு செய்யலாம் கம்பர் போன்றோர்.

பெண் அழகையும் அவள் பெருமையையும் எல்லோரும் புகழ்ந்து விடுவார்களா? எல்லாவற்றிற்கும் இருப்பதுபோல இதற்கும் விதிவிலக்குண்டு. வாழ்க்கையில் தோல்வியடைந்தவர்கள், வாழ்க்கையில் விரக்தி பெற்றவர்கள், உலகத்தை முற்றும் துறந்ததாகச் சொல்லிக்கொண்டு தம்மைத் தாமே துன்புறுத்திக் கொண்டவர்கள்—இவர்களுடைய அபிப்பிராயம் வேறுவிதமாகத்

---

* அன்பர் துரை அவர்களின் "மகளிரைப் பழிப்பது தகுதியா?" என்ற அழகிய கட்டுரை என்னைப் பெண்ணைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டியது. அதன் பயனாய் எழுந்த "a loose sally of the mind" இது.

தான் இருக்கிறது. அவர்களில் சிலர் பைப்பிளைக் கொண்டு வந்து, 'பாருங்கள் பெண்களுக் களிக்கப்படும் ஸ்தானத்தை' என்று காட்டுகின்றனர் இதை: (சாத்தானும் வேதத்தை ஆதார மாகக் காட்டுவானே என்கிறீர்களா? நான் அப்படிச் சொல்ல மாட்டேன். காரண முண்டு. எனக்கே அது திரும்பிவிடக் கூடாது பாருங்கள்); "ஆண் பெண்ணுக் குரியவனல்லன்; பெண் தான் ஆணுக்காகும்; ஆண் பெண்ணுக்காகப் படைக்கப்பட வில்லை; பெண் தான் ஆணுக்காக." ஆனால் ஆதிப் பெண்ணைக் கடவுள் எப்படி சிருஷ்டித்தார் என்பதை அவர்கள் மறந்து விடுகின்றனர். ஆதித் தந்தையின் விலா எலும்பிலிருந்து ஆதித்தாயைக் கடவுள் சிருஷ்டித்தார். ஆதாமின் தலை எலும்பி லிருந்தாவது, கால் எலும்பி லிருந்தாவது ஏவாளை ஏன் சிருஷ்டிக்க வில்லை? அப்படிச் செய்தால் பெண் ஆணுக்கு மேற்பட்டவ ளென்றோ கீழ்ப்பட்டவ ளென்றோ ஆகிவிடு மல்லவா? ஆகவே, ஆதித் தாய் ஆதித் தந்தைக்கு சமம் என்று காட்டுவதற்குத்தான் அவளை அவருடைய விலா எலும்பிலிருந்து படைத்திருக்கிறார் கடவுள். (விலா எலும்பு எவ்வளவு கோணலோ அவ்வளவு கோணல் மனம் படைத்தவள் பெண் என்கிறார்கள் தத்துவஞானி தாமஸ் பிரௌன் போன்ற கோணல் மனம் படைத்தவர்கள்). பெண் பிறப்புப் பெருமை யில்லாதது (பெண்ணெனப்படுவ கேண்மோ பீடில), பெண்கள் மன அன்பெல்லாம் முயற்கொம்பு தான் (பெண்கள் அக்காத வெல்லாம் பேசு முயற் கொம்பே), பெண்களின் கண்கள் சாளரங் களில் மெய்நெறியை விட்டு விலகுவன என்றனர் நம் நாட்டுச் சைனர்கள். "பெண்களை ஏன் கடவுள் படைத்தார்? மரங்கள் முளைப்பதுபோல், மனிதர்கள் பெண்களின்றியே முளைக்கும்படி கடவுள் ஏன் செய்திருக்கக் கூடாது?" என்கிறார்கள் ஆங்கில ஞானிகள் சிலர்.

ஆனால் யாரும் மறுக்க முடியாத உண்மை பெண் சக்தி, சர்வ சக்தி, மூல சக்தி என்பது. ஆண் சிவம்; பெண் சக்தி. இரண்டும் சேராவிட்டால் உலகில் தொழிலில்லை. சக்தியின்றேல் சிவமில்லை; சிவமின்றேல் சக்தியுமில்லை தான். ஆனால் சக்தி சர்வ சக்தி. ஆகவேதான் வேதங்கள் புராணங்க ளெல்லாம் ஆதி சக்தியைப் பெண் என்றன; பராசக்தி என்றன; மஹா மாயா என்றன; தேவர்க்கும் மூவர்க்கும் முதல்வி என்றன.

உலகில் கஷ்டங்கள் வருவதெல்லாம் பெண்ணால், அவள் இன்னல் கொடுப்பவள், இராவணன் அழிந்ததும் பெண்ணால், இந்திரன் அழிந்ததும் பெண்ணால் என்றெல்லாம் கூறுவர் சிலர். 'ஆண் அறிவுக்கு அரசன், பெண் உணர்ச்சிக்கு ராணி. இந்த அறிவுக்கும் உணர்ச்சிக்கும் உலகந் தோன்றிய நாள் முதல் போராட்டம் நடந்துகொண்டு வருகிறது....உலகத்தில் ஞான மார்க்கத்திற்கு வழி காட்டி பெண். மாயக் குழலோசைக்குக் கட்டுப்பட்டு மாளும் சர்ப்பத்தைப்போல், அவள் உணர்ச்சிகளால் விழுங்கப்பட்டு விடுகிறாள்' என்கிறார்கள். சற்று சிந்திக்க வேண்

டும். யாரால் யார் அழிந்தார்கள்? பெண்ணால் ஆணு, ஆணால் பெண்ணு? விபசார விடுதிகளை ஏற்படுத்திக்கொண்டு அவளாகவே தொழில் நடத்த ஆரம்பித்து விட்டாளா? ஆனால் தான் அவள் வயிறு கழுவ அந்நிலைக்கு வந்திருக்கிறாள் என்பதை மறுக்க முடியுமா? பருவ வய தடைந்த பெண்கள் பலர் விதவை என்ற விலங்கால் பிணைப் புண்டு ஒருவித சுகமும் அறியா திருப்பதற்குக் காரணம் என்ன? ஆண்கள் அவ்விதம் விதவைகளாக இருக்கிறார்களா? இராவணன் அழிந் தது ஒரு பெண்ணால் என்றால் அவனால் அழிந்தது எத்தனையோ பெண்கள். சரி போகட்டும். அவன் யாரால் அழிந்தான்? சூர்ப னகையால் தானே? சூர்பனகை பெண்மை சிறிது மற்ற பேய். பெண்மையற்ற அரக்கியாகிய அவளைப் பெண் என் றழைப்பதே தகாது; இராவணன் சீதையால் 'விளக் கெதிர்வந்த விட்டில் பான்மையன்' ஆனான் என்றால் அவன் அழிந்ததற்கு அவளைக் காரணமாகக் கூற முடியுமா? அவள் கஷ்டப் படத்தான் அவன் காரணமாய் இருந்தான்.........ஆணின் முன்னால் பெண் மகுடி யைக் கண்ட சர்ப்பம்போல் நடுங்குவது ஓரளவுக்கு உண்மைதான். காரணம் மகுடியிலிருந்து எழும் ஜீவநாதம். அந்த இசை வெள் ளத்தில் அவள் அகப்பட்டு விட்டதை அறிந்தால் அதை விட்டு நீந்த முயல்கிறாள் என்பதும் மறுக்க முடியாததுதான். ஆனால் பெண் மட்டுந்தானா பாவத்திற்கு வழி காட்டி? முழுப் பாரத்தை யும் அவள் தலையில் போட முடியுமா? ஆண் மட்டும்......? பெண் ணில் அறிவுக்கு அரசி இல்லையா? எத்தனையோ துளசிதாசர்கள் ஏற்பட அவள் காரணமா யிருக்க வில்லையா? நிற்கட்டும்.

மார்க் ட்வேயின் என்ற ஹாஸ்ய எழுத்தாளர் சொல்கிறார், 'எந்த வகையில் பார்த்தாலும் சரி, பெண்கள் மனித சமூகத்திற்கே ஒரு அணி கலன்; பூமிக்கே ஒரு முத்து. காதலி என்ற வகையில் பெண்ணுக்கு இணை யார்? பாலூட்டும் தாய் என்ற முறையில் பெண்களுடன் ஆண்களால் போட்டி யிட முடியாது' (போட்டி யிட்டுத்தான் பார்க்கட்டுமே என்கிறார் ஒரு பெண்) என்று. ஆகவேதான் 'கற்புடைமை, நாணம், அன்பு, சுயநலத் தியாகம் முதலிய அரும் பெருங் குணங்கள் ஆண்களை விடப் பெண்களிடமே அதிகமாக உள்ளது' என்று தாகூர் கூறு வதை நாமும் ஆமோதிக்கவேண்டிய தாகிறது.

ஆனால் சூர்ப்பனகையைப் பேய், பெண் இல்லை என்றோம். இந்த வகையைச் சார்ந்த சிலர் பெண் என்ற வேஷத்தில் இருக்க லாம். இதை மறுக்க முடியாதுதான். ஒரு டால்ஸ்டாய் 'அப் போது இடி இடித்தது, இப்போது மழை பெய்கிறது' என்று சொல்லும்படியாகக் கொடுமை செய்தவளும், ஒரு குருட்டு மில் டன், 'என் மனைவி ரோஜாவைப்போல் இருக்கிறாள் என்கிறார் களே? நான் ரோஜாவின் முட்கள் குத்துவதைத்தானே அனுபவிக் கிறேன்? ரோஜா மலரின் மணத்தை முகர வில்லையே' என்று ஆற்றாமைகொள்ளக் காரணமாய் இருந்தவளும், பெண்கள் என்ற பெயரால் இல்லாமல் இருக்க முடியுமா? நான் முதலில் சொன்ன படி இதற்கும் விதி விலக்கு உண்டு.

பெண்ணைப்பற்றிக் காந்திஜி என்ன சொல்கிறார் பாருங்கள். "பெண்ணுரிமை விஷயத்தில் எனக்கு இன்னும் சமர்தானம் ஏற்படவில்லை...நான் மகனையும் மகளையும் சம அந்தஸ்துடனேயே நடத்துவேன்." "பெண் சுயநலத் தியாகத்தின் உருவம். ஆனால் துரதிஷ்டவசமாக அவளுக்கு மனிதனின் மேல் உள்ள மாபெரும் சாதனத்தை அவள் உணரவில்லை." "பெண்ணைப் பலமற்ற ஜாதி (Weaker Sex) என்றழைப்பதே ஒரு சாபக்கேடு." ஆகவே நான் முதலில் சொன்னதுபோல் பெண்ணின் பெருமைகளைப் பெரியோர்கள் பலர் பேசுகின்றனர்; கவிஞர்கள் தங்கள் திறமை முழுவதையும் காட்டி இருக்கிறார்கள் அவளை அழகு செய்வதில்—அவளைப் புகழ்வதில். அவர்கள் ஆணுடன் பெண்ணும் சரி நிகர் சமம் என்று பல வழிகளிலும் எடுத்துக்காட்ட முயன்றிருக்கின்றனர். ஆகவே தான் நாமும் பாரதியுடன் சேர்ந்து,

மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்துவோம்.

என்று சொல்கிறோம்.

யாரோ ஒருவர் பெண் என்றால் என்ன என்று விளக்குகிறார். பெண் என்ற கலப்பு வஸ்துவில் பிரம்மன் பூரணச் சந்திரனின் வடிவத்தையும், இனிய ரோஜாவின் மலர்ச்சியையும், அணிலின் ஒரு நிலையற்ற மனத் தன்மையையும், மானின் பார்வையையும். முயலின் மருட்சியையும், வைரத்தின் கடினத்தையும், தாவியின் மென்மையையும், பூனையின் பாசாங்கையும், நரியின் தந்திரத்தையும் கலந்துமனிதனுக்கென்று தந்திருக்கிறான்.

# டேவிட் ஸ்வான்

## நத்தேனியல் ஹாத்தோர்ண்

★

(கு. அழகிரிசாமி மொழி பெயர்த்தது.)

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

சில நேரங்களில் வண்டு கடியினால் மரணம் கூட சம்பவித்து விடுகிறது அல்லவா? அதனால், சுயேச்சையான உள்ளம் படைத்த அந்தப் பேதைப் பெண் தன் கைக் குடையால் அந்தத் தும்பியை அடித்துத் துரத்தி விட்டாள். என்ன அழகான காட்சி! படபடக்கும் உள்ளத்தோடும், அளவு கடந்த சங்கோஜத்தோடும் இந்த உபகாரச் செயலை செய்து முடித்த அந்தப் பெண், வெள்ளம் ததும்பும் அந்த அந்நியனை ஒரு பார்வை பார்த்தாள். அந்த இளைஞனுக்காக, ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஒரு வண்டோடு போராடி யிருக்கிறாளே!

"எவ்வளவு அழகாக இருக்கிறான்!" என்று நினைத்ததும் அவளுடைய முகம் பின்னும் நாணத்தால் சிவந்தது.

டேவிட் ஸ்வானும் தன் மனதுக்குள்ளேயே, ஒரு அழகான பெண்ணைக் கனவு கண்டு, அப்படிப்பட்ட ஒரு பெண்ணுடன் சுகித்து வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டிருக்க மாட்டான் என்று நாம் சொல்ல முடியுமா? என்றாலும் அப்போது, இந்தப் பெண்ணை வரவேற்கும் தோரணையில் அவன் முகத்தில் புன்னகை அரும்ப வில்லை. ஒரே தன்மையில் இயன்ற ஆத்மாக்கள் என்று நெடுங்காலமாக வழங்கி வரும் கூற்றைப் போல, அவனைப் போன்ற ஆத்மாவைப் பெற்ற, அவன் சந்திக்க வேண்டும் என்று ஆவலோடு எதிர்பார்த்த அந்தப் பெண்ணும் வந்து விட்டாள். இருவர் மட்டும் ஒருவரோடு ஒருவர் சந்தித்திருந்தால் அவளைத் தான் அவன் முழு அன்போடு காதலித் திருப்பான்; அவளும் அவனைத்தான் தன் அந்தரங்க இருதயத்தில் வைத்துப் போற்றி யிருப்பாள். ஆனால் அவன் உறங்கிக் கொண்டிருக்க, அவள்தான் அப்போது நீருற்றுப் பக்கமாக அவன் மீது கொண்ட காதலால் நாணுற்றவளாய் நின்று கொண்டு இருந்தாள். அவள் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டால், அந்த நாரீ ரத்தினம் அவன் வாழ்க்கையில் மறுபடி ஒளி வீசப் போவதே இல்லை.

"எவ்வளவு சுகமாகத் தூங்குகிறான்" என்று மெல்லச் சொன்னாள் அந்தப் பெண்.

அப்புறம் அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டாள். ஆனால் அவள் வரும்போது நடந்து வந்த மாதிரி அவ்வளவு உல்லாசமாக நடந்து செல்லவில்லை.

அப் பெண்ணுடைய தகப்பனார் அந்தப் பக்கத்தில் ஒரு பெரிய வியாபாரி. அந்த சமயத்தில் சந்தர்ப்ப வசமாக அவருக்கு வியாபாரஞ் செய்வதற்கு ஒத்தாசைக்காக ஒரு வாலிபன் தேவையாக இருந்து, அவளும் தற்செயலாக டேவிட்டை வழிமேல் சந்தித்து ஏதோ கொஞ்சம் அறிமுகம் செய்து கொண்டிருந்தால், நிச்சயமாக டேவிட் தான் அவரிடம் குமாஸ்தாவாக அமர்ந்திருப்பான். மற்றக் காரியங்களும் அதைத் தொடர்ந்து கிரமப்படி நடந்திருக்கும். ஆக்வே, இப்பொழுதும் ஒரு பெரும் அதிர்ஷ்டம் அவனை மிகவும் நெருங்கி வந்து நழுவி விட்டது. அந்தப் பெண் அதை விட்டுப் புறப்பட்டுப் போகும் போது அவளுடைய உடை டேவிட்டை உரசிக்கொண்டு சென்றது. அதெல்லாம் அவனுக்கு எங்கே தெரியப் போகிறது?

அந்தப் பெண் அவ் விடத்தை விட்டுப் போய் சிறிது நேரம் தான் இருக்கும். அப்போது சாலை வழியே வந்த இரண்டு மனிதர்கள் அந்த மரத்து நிழலில் சிறிது ஒதுங்கினார்கள். அவர்கள் இருவருடைய முகமும் கருப்பாக இருந்தன. தலையில் துணிக் குல்லாய்கள் தரித்திருந்தார்கள். அவைகள் புருவத்தை மறைக்கும் வண்ணம் இழுத்து விடப்பட்டிருந்தன. அவர்கள், மிகவும் அழுக்குப் படிந்த உடை உடுத்தி யிருந்தாலும் தம்முடைய வேலையில் சுணைப் போடும் சுறுசுறுப் போடும் இருந்தார்கள். இரண்டு பேரும் சரியான போக்கிரிகள்; கெட்ட தொழில்களைச் செய்தே தங்கள் வாழ்நாளைக் கழித்துக்கொண்டு வருபவர்கள். இப்போது அவர்கள் தங்கள் வேலையின் நடுவே, அந்த சின்ன இடைக்காலத்தில் அவர்கள் அடுத்தபடியாக களவாடப் போவதில் கிடைக்கும் லாபத்தை எப்படிப் பங்கு போட்டுக் கொள்வது என்பதைத் தீர்மானிக்க அந்த 'மாப்பில்' மரநிழலுக்கு வந்தனர். அப்போது, அந்த இருவரில் ஒருவன் தூங்கிக் கொண்டு இருந்த டேவிட்டைப் பார்த்துக் கொண்டான். உடனே மற்றவனிடம் மிகவும் மெல்லிய குரலில்,

"ஏய், அவன் தலைக் கடியில் இருக்கிற பொட்டணத்தைப் பார்த்தியா?" என்று கேட்டான்.

மற்றவன் கடைக் கண்ணால் சிமிட்டிக் கொண்டு தலையை ஆட்டினான்.

முதலாமவன், "ஏய், நாம் பந்தயம் வச்சிக்கிடுவோம். அந்தப் பயல் சட்டைக்குள்ளே, நோட்டுப் பொஸ்தகமாவது, துட்டுப் பையாவது இருக்கும். அங்கே யில்லாட்டா அவன் கால் சட்டைப் பைக்குள்ளே பார்ப்போம்" என்றான்.

"அவன் முழிச்சிக்கிட்டால்?" என்றான் இரண்டாமவன்.

அதற்கு அவன், தன் சட்டையை விலக்கி, தன்னுடைய கட்டாரியின் கைப்பிடியைக் காட்டிக் கொண்டு தலையை ஆட்டினான்.

"அப்படியானால் சரி" என்றான் இரண்டாம் திருடன்.

தூங்கிக் கொண்டு இருக்கும் டேவிட் பக்கம் அவர்கள் சென்றார்கள். ஒருவன் கத்தியை உருவி டேவிட்டின் நெஞ்சுக்கு நேராகப் பிடித்துக் கொண்டான். மற்றவன் அவன் தலைக்கடியில் இருக்கும் பொட்டணத்தைப் பரிசோதிக்க ஆரம்பித்தான். அவர்கள் இருவருடைய முகங்களும் இருள் மூடிப்போய், சுருக்கல் விழுந்து, பயங்கரமும் பீதியும் நிறைந்து இருந்தன. அதனால், டேவிட் விழித்தெழுந்து விட்டால் அவர்களைக் கொள்ளைக்காரர்கள் என்று எளிதில் கண்டு கொள்ளலாம். அந்தத் திருடர்களும் அந்த சுனையில் எட்டிப் பார்த்தால் தங்களுடைய முகத்தோற்றம் எவ்வளவு கொடூரமாக இருக்கிறது என்று கண்டு கொள்ளலாம். இதெல்லாம் இப்படி யிருக்க, டேவிட் ஸ்வானோ தன் தாயின் மார்பகத்தில் தூங்குவதை விட அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான்.

"நான் பொட்டணத்தை எடுத்துக் கொள்றேன்"

"நான், அவன் ஆடினாலும் அசைந்தாலும் ஒரே போடாய் போட்டு விடுகிறேன்"

இருவரும் 'குசு குசு' என்று பேசிக் கொண்டனர்.

அந்த சமயத்தில், தரையை முகர்ந்து பார்த்துக் கொண்டே ஒரு நாய் அந்த மரத்து நிழலுக்கு வந்தது. வந்து அந்த இரண்டு கிராதகர்களையும், அமைதியாக நித்திரை செய்பவனையும் மாறி மாறிப் பார்த்தது. பிறகு ஊற்று நீரைப் போய் நக்கி நக்கிக் குடித்தது.

ஒரு திருடன், "அட்டா! காரியம் கெட்டில்லா போயிட்டது. நாய் வந்திருக்கே, இது கூட ஆளும் வந்திருப்பா னில்லே?" என்றான்.

"உம். கொஞ்சம் தண்ணி போட்டுக் கொண்டு பேசாமல் போவோம்" என்றான் மற்றவன்.

முதல் திருடன் தன் கத்தியைப் பழையபடியும் உள்ளே சொருகிக் கொண்டு, ஒரு கைத் துப்பாக்கியை வெளியே எடுத்தான். ஆனால் அது சுடக்கூடியது அல்ல. அதற்குள்ளே சாராயம் அடைத்து அந்தக் குழாயின் வாயை ஒரு தகர டம்ளரால் மூடியிருந்தார்கள். ஆளுக்கு ஒரு டிராம் சாராயத்தை குடித்து விட்டுப் போய் விட்டார்கள். போகும் வழியில், இப்படி அரை குறையாக விட்டுப்போன தம் வேலைகளைப் பற்றி எத்தனை விளையாட்டும் சிரிப்புமாகப் பேசிக்கொண்டு போனார்களோ? கொஞ்சநேரம்

போஞல் அவர்கள் எல்லாவற்றையுமே மறந்து விடுவார்கள். தங்களுடைய பாப கிருத்தியங்களை யெல்லாம் என்றும் அழிந்து போகாமல் சித்திரபுத்திரன் குறித்துக் கொண்டு வருவானே என்று அவர்கள் ஒரு நாளாவது யோசித் திருப்பார்களா?

டேவிட் ஸ்வான் இன்னும் தூங்கிக் கொண்டு இருந்தான். தன் உயிரின் மீது ஊசலாடிக் கொண்டிருந்த மரணத்தின் சாயை தன் மீது விழுந்ததையாவது அல்லது அந்த சாயை நீங்கப் பெற்று தான் மறு உயிர் பெற்றதையாவது அவன் உணர்ந்தாஞ?

அவ்வளவுதான். அந்த ஒரு மணி நேரத் தூக்கத்தில் அவனுடைய அலுப் பெல்லாம் நீங்கி விட்டது. இலேசாக உடலை அலட்டிஞன். குரல் கிளப்பாமலே உதடுகளை சிறிது அசைத்தான். பட்டப் பகலில், கனவிலே தோன்றிய பிசாசுகளோடு கனவிலேயே ஏதோ பேசிஞன். அந்தச் சாலை வழியாக இருக்க இருக்க அதிகமாகிக் கொண்டு வரும் வண்டிச் சக்கரங்களின் இரைச்சல் டேவிட்டின் தூக்க மூட்டத்தை மோதிக் கலைத்து விட்டது. அது ஒரு ஜட்கா வண்டி. உடனே திடீர் என்று விழித் தெழுந்து வண்டியை நிறுத்தி, "ஒரு ஆளுக்கு இடம் இருக்குமா?" என்று கேட்டான்.

வண்டி யோட்டியும் ஏறிக் கொள்ளச் சொன்ஞன்.

வண்டியில் ஏறிக் கொண்ட டேவிட் கடைசிப் பார்வையாகக் கூட கனவு அதிசயம் போன்ற அந்த நீர்ச்சுனையைப் பார்க்காமல் போஸ்டனை நோக்கிக் குதூகலமாகப் போய்க் கொண்டிருந்தான். அந்த சுனை நீர்ப் படுகையில் பொன் வண்ணம் பாய்ச்சிய ஒரு கற்பனை பொக்கிஷத்தையும், ஊற்றுநீர் வீழ்ச்சியால் ஏற்பட்ட முணு முணுப்பிற்கு இசையும்படி ஏங்கிய காதலின் பெருமூச்சையும், அந்த நீரில் ரத்தம் படியுமாறு பயமுறுத்திய மரணத்தையும், தன் ஒரு மணி நேரத் தூக்கத்தின் போது நடந்த எல்லாவற்றையுமே அவன் என்ன கண்டான்? உறக்கத்திலும் சரி, விழிப்பிலும் சரி, சில விசித்திரமான புதுச் சம்பவங்களுடைய சூக்ஷ்ம சஞ்சாரத்தின் காலடி யோசைகளை நாம் கேட்பதில்லை. நம்முடைய வாழ்க்கைப் பாதையில், கண்ணுக்குத் தெரியாமல் எதிர்பாராத சம்பவங்களை ஏதோ ஒரு அதீதமான சக்தி குறுக்கிட வைக்கிறது என்று சொல்லலாம் அல்லவா? அதஞல், நம்முடைய இந்த நிலையற்ற வாழ்விலும் வருங்காலத்தை உணரும் வண்ணம் ஒரு ஒழுங்குமுறை நம்மிடம் இருக்க வேண்டாமா?

---

## முன் யோசனை?

மாடியிலிருந்து தவறி கீழே விழுபவர்:—(பாக்கெட் கடிகாரத்தைச் சட்டென்று எடுத்து) ஸார்! ஸார்! தயவு செய்து இதைக் கொஞ்சம் பிடியுங்கள். ஏனெனில் இது தவறி கீழே விழுந்துவிட்டால் உடைந்துபோய் விடும்!

—டி. எஸ். குப்புஸ்வாமி.

# கலியுகக் கம்பர் ★ (சவிநாசன்)

நந்தமிழ் நாட்டில் தற்சமயம் "க" முதல் "ன" வரை அவதார புருஷர்கள் தோன்றி நம் தாய் மொழியாம் தமிழைப் பல வழிகளிலும் உயர்த்தி (?) வருகிறார்கள்.

எந்நேரமும் "பாவம்; பாவம்" என்று முணுமுணுப்பது தான் இவர்கள் மந்திரம். 'அதில் பாவ மில்லை, இதில் பாவ மில்லை; ஆனதால் அதை வெட்டு, இதைக் கொல்லு' இது அவர்கள் தொழில். தமிழ் அன்னை செய்த பாவமோ, அன்றி நாம் செய்த பாவமோ, கம்பன் வாக்கின்படி மண் செய்த பாவமோ கண் செய்த பாவமோ, இத் திருக்கூட்டத்தைப் பாவம் பிடித்துக் கொண்டிருக்கிறது. அவ்வளவு தான். பாவம்! நிற்க.

இத் திருக்கூட்டத்திலே கம்பனே மறுபிறப்பு எடுத்து வந்தவர்போல் விளங்கும் 'கலியுகக் கம்பரைப்'பற்றி இங்கு சில வார்த்தை சொல்ல வேண்டிய திருக்கிறது. சேவை செய்யக் கூடியவர்களைக் குற்றம் சொல்லலாமா என்று கேள்வி எழக்கூடும். சேவை என்ற பதம் தீமை என்ற பொருள் கொடுக்கும் நிலைமைக்கு வந்துவிட்டால் அந்தச் சேவை வேண்டியதே யில்லை.

இந்தக் "கம்பர்" திருத்திய பாடல் ஒன்றைக் கவனியுங்கள். அதாவது கம்பன் பாடியதாக யாரோ கட்டி விட்ட ஒரு வெண்பா:—

"மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?
உன்னையறிந் தோதமிழை ஓதினேன்?—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ? உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு."

கவிகுல திலகமாகிய கம்பன் தன்னையே குரங்கென்று பொருள் படும்படி பாடக்கூடிய அவ்வளவு முட்டாள் அல்லன் என்று சொல்லி இப் பாடலோ இதன் சம்பந்தப்பட்ட கதையோ பொய்யென்று தள்ளி விடலாம். ஆனால் க. கம்பரோ என்ன செய்தார் என்று நினைக்கிறீர்கள். கடைசி இரண்டடியும் தனக்கும் வெண்பாப் பாட வருமென்று காட்டிக் கொள்ளுவதற்காகத் திருத்தி அமைத்திருக்கிறார். எப்படி யென்றால்:—

......... .......... .......... .......... ..........
......... .......... .......... ..........—என்னை
பரிந்தேற்றுக் கொள்ளாப் பதியுண்டோ உண்டோ
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்து.

நன்கு பாடிப் பாருங்கள். சந்த மென்றும், ஜதி என்றும், சீர் என்றும் அங்கம் அங்கமாகப் பிரித்துக் களிக்கும் க. கம்பரின் செப்பனிட்ட வரிகளை. "கொள்ளாப் பதியுண்டோ." "கொள்ளாத வேந்து" என்றும் எழுதத் துணிந்த இவரைப் பற்றிக் கவிதைப் பண்ணிலே பிறந்து பண்ணிலே வாழ்பவர் என்று எப்படித்தான் அவதாரங்கள் புகழ் பாடித் திரிகின்றனவோ!

க. கம்பர் இப்படி ஏதோ சில்லறைப் பாட்டுக்களைத் திருத்திக் கொண்டு அவதார புருஷர்களுக்குள் ஒருவர்க் கொருவர் துதி பாடிக் கொண்டு மிருந்தால் நாம் ஒன்றும் இவர்களைக் கவனிக்கப் போவதே இல்லை. "ஆட்டைக் கடித்து" என்ற கதை சொல்லுவார்களே அதேபோல், க. கம்பர், கம்பனின் காவிய மாளிகையே இடித்துக்கொண்டு, "ஆகா! கம்பன் சுவர்க்கு உள்ளே தான் நன்றாய்க் கட்டி யிருக்கிறான்; அதுதான் கம்பன் கட்டியது. மேல் பூச்செல்லாம் நாலாந்தர ஐந்தாம்தரக் கவிஞன் பூசியது. ஆனதால் அவற்றை யெல்லாம் இடித்துத் தள்ளி விட்டு (பாழடைந்த) உட்சுவரைத்

தான் பார்க்க வேண்டும்; கொண்டாட வேண்டும்" என்று ஒரு கூச்சலைக் கிளப்பி விட்டிருக்கிறார். அதோடு நிற்கவில்லை. இடித்துத் தள்ளியும் விட்டிருக்கிறார். அவர் பதிப்பித்த கம்பராமாயணத்தைத் தான் குறிப்பிடுகிறோம்.

சுமார் இரண்டாயிரம் பாடல்களுக்கு மேற்பட்ட இரு காண்டங்களில் க. கம்பர் சுண்டிப் பார்த்து எழுநூறு பாடல் வரை பொறுக்கி எடுத்திருக்கிறார். அவை தான் கம்பனால் பாடப் பெற்றவை என்றும் மீதி யாவையும் செருகு கவி என்றும் அஞ்சாமல் ஆணையிடுகிறார். இவர் கொள்கையின்படி கம்பன் ஒரு நாணயம் அச்சடிக்கும் யந்திர சாலையாக இருக்க வேண்டும். ஒரே மாதிரி நாணயம் அடித்துத் தள்ளுவதுபோல் கம்பனும் கவிதையடித்துக் கொட்டினான் என்று நம்புகிறார் போலும்.

இனி, க. கம்பர் பதிப்பித்த நூலையும் சிறிது பார்ப்போம். கம்பனின் அவையடக்கப் பாடலில்,

"மூத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்தமக் கவிஞர்க்கு ஒன்று உணர்த்துவன்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ!"

என்று விநயமாக விண்ணப்பித்துக் கொள்ளுகிறான். இதற்குக் க. கம்பரின் பொருள் சொல்லும் அழகைக் (கைகாட்டி என்று சொல்லிக் கொள்ளுகிறார்) கண்டு களியுங்கள். "கவிஞர்கள் விஷயங்களைப் பாவனை உலகத்தில் ஏதோ ஒரு வெறி மயக்கத்தில் கண்டு பாடுவார்கள். அந்தப் பாவனை உலகத்தில் பிரவேசிக்க முடியாத சாமானிய மக்களுக்கு, எல்லாம் பைத்தியம் என்று தோன்றலாம். ஆனால் உண்மையில் அவை பக்தியிலிருந்தே உண்டாவன—அதைப் பற்றிக் குற்றம் கூற யாருக்கும் பாத்தியதை இல்லை."

"பண்டு" என்ற சொல்லுக்கு விண்டு விண்டு அர்த்தம் எழுதும் இக் கலியுகக் கம்பர்—மேலே கண்ட பாடலில் எங்கேதான் சாமானிய மக்களைக் கண்டாரோ—பாத்தியதை யில்லை என்பதைக் கண்டாரோ—யாமறியோம். பொருள் ஒன்றிருக்க மருள் கொண்டு எழுதக் காரண மென்ன? எல்லாம் தன்னைக் கலியுகக் கம்பராக மதிக்கவேண்டு மென்ற ஆசை தானே! எல்லோருக்கும் தான் ஆசை யுண்டு. அதைக் குற்றமென்று சொல்ல வரவில்லை. அதற்காக அன்னையைக் கொலை செய்ய வேண்டாம். கூடவே கூடா தென்பதுதான் எம்போன்றார் வேண்டு கோள்.

இவர் இதே ஆசையால் கடந்த பத்துப் பதினைந்து ஆண்டுகளாக நந்தமிழன்னையை வேறொரு வழியிலும் சித்திரவதை செய்து வருகிறார். அதன் கறை இந்நூல் பூராவும் படிந்திருக்கிறது.

சொல் + கொண்ட = சொற்கொண்ட
வாள் + தடம்கண் = வாட்டடங்கண்
அதன்கண் + சென்று = அதன்கட்சென்று
பொன் + தாமரை = பொற்றாமரை.

இவை தமிழ்ப் புணரியல் முறை. ஆனால் க. கம்பர் எப்படி இவைகளை எழுதுவார் என்றால், சொல்க் கொண்ட, வாள்த் தடங்கண், அதன் கண்ச் சென்று, பொற் தாமரை என்று தம் குயுக்தி முறையில் வரைவார். தமிழ் நாட்டில் வல்லினம் மெல்லினம் இடையினம் வித்தியாசம் தெரியாமலும், புணரியல் முறை தெரியாமலும் எத்தனையோ 'மறு மலர்ச்சி எழுத்தாளர்' தோன்றி யிருக்கும் இந்நாளில் இவர் ஏன் இல்லாத—தகாத வழக்

(42-ம் பக்கம் பார்க்க.)

# தோழியின் கேள்வி

(கு. ராஜாராம்.)

உல்லாசமான மாலைப்பொழுது. மேற்றிசையில் சந்திரவன் கடல் நீராட விரைந்து கொண்டிருந்தான். மந்தமாருதம் மருண்டு வீசிக் கொண்டிருந்தது.

அந்தி வேளையில் கடலும், கரையும் ஒரே பொன் மயமாக விளங்கின. இந்த இன்பகரமான இயற்கை அழகினைப் பருகிக் கொண்டு, ஒரு பெண்ணும் அவளது தோழியும் கடற்கரையில் உலாவிக் கொண்டிருந்தனர்.

அப் பெண் இளமை பூரித்து எழில்வடியும் மோஹினி போன்றிருந்தாள். அவளது மருண்ட பார்வையும், இருண்ட கூந்தலும், திரண்ட மார்பும் கண்டோர் மயங்கும்படி அவ்வளவு அழகாயிருந்தன. வலம்புரிச் சங்குகள் சஞ்சரிக்கின்ற மணல் நிறைந்த அக் கடற்கரையில் அவ்விருவரும் உலவியது கண்கொள்ளாக் காட்சியா யிருந்தது.

சென்று கொண்டிருக்கும்போது அவர்கள் ஒரு வாலிபனைச் சந்தித்தனர். வாலிபனின் கண்களும், அப் பெண்ணின் நயனங்களும் சந்தித்தன. இருவருடைய உடல்களிலும் மின்சாரம் பாய்வது போன்ற ஒரு உணர்ச்சி ஏககாலத்தில் ஏற்பட்டது. ஆம். காதல் பிறந்து விட்டது! தோழி எல்லாவற்றையும் அறிந்து கொண்டாள். காதலின் ஜனனத்தோடு அன்றைய நாடகம் முடிந்தது.

மறுநாள் அதே மாலைப்பொழுது அருமையான காற்று. மீண்டும் புதிய காதலர் சந்தித்தனர். இரண்டு இளம் உள்ளங்கள் ஒன்று சேர்ந்து நிற்கும்போது, மூன்றாவது ஆளுக்கென்ன வேலை? சமய மறிந்து தோழி மெல்ல நழுவிவிட்டாள்.

அன்று ஊன்றப்பட்ட காதல் வித்து 'தக்தக'வென வளர்ந்து காதலனும், காதலியும் இரகசியமாகப் பன்முறை சந்தித்தனர். அப் பெண்ணின் உயிர்க்குயிரான தோழிதான் அவர்களுக்குப் பேருதவி செய்து வந்தாள்.

ஒருநாள் காதலன், காதலிக்குச் சில வளையல்கள் கொணர்ந்தான். அவை மிக்வும் அழகானவை. அவற்றை அவனே அவளது அலர்க்கரங்களில் அணிவித்தான். அழகுக்கு அழகு செய்வது போன்றிருந்த அவ்வளைகள் அவர்களது காதலின் சின்னமாகத் திகழ்ந்து கொண்டிருந்தன.

இன்பகரமான நாட்கள் சில கழிந்தன. காதலர் உலகிற்கே நஞ்சு போன்ற பிரிவு ஏற்பட்டது. காதலன் பொருளீட்டுவதற்காக அயல் நாடு செல்ல வேண்டியதாயிற்று. 'மிக் விரைவினில் வருகிறேன்' என்று தன் ஆருயிர்க் காதலியிடம் கூறிப் பிரியா விடைபெற்றுச் சென்றான்.

காதலன் கூறியபடி குறித்த காலத்தில் வரவில்லை. பிரிய காதலனைப் பிரிந்த காதலியின் உள்ளம் படாத பாடு பட்டது.

படுக்கை கொள்ளவில்லை. தூக்கம் என்பதே அற்றுப் போய் விட்டது. பாலும் கசந்தது. எந்நேரமும் தன்னுடைய உயிர்க் காதலனையே நினைத்துக் கொண்டிருந்தாள்.

நாட்கள் பல ஆகியும் காதலன் திரும்பக் காணோம். காதல் நோய் அவளைக் கடுமையாய் வாட்டியது. அவளது அழகிய மாமை நிறம் நீங்கிப் பசலை பரவலாயிற்று. தேகம் நாளுக்குநாள் மெலிந்து கொண்டே வந்தது. காதலன் அணிவித்த வளைகள் கூடத் தாமாகவே கழன்று விழலாயின.

வெகு நாட்களுக்குப் பிறகு, மிகுந்த பொருளோடு காதலன் நாடு திரும்பி வந்தான். காதலிக்காகக் கடற்சங்கினால் ஆகிய வனப்பு வாய்ந்த வெள்ளைநிற வளைகள் சில கொணர்ந்திருந்தான்.

தோழியைச் சந்தித்து, காதலிக்கு என்று கூறி அவ் வளை யல்களைக் கொடுத்தான். அப்பொழுது தோழி, அவனைப் பிரிந் திருந்த காலத்தில் தன் தலைவி பட்ட துன்பத்தையும், அத் துன் பம் நீக்கி அவளை மணந்துகொள்ள வேண்டுமென்பதையும் குறிக் கும் முகமாக, "இப்பொழுது கொடுத்த வளைகள் (முன் கொடுத் தவை போலல்லாமல்) நல்லவைதானே?" என்று கேட்டாள்.

அவனது பிரிவினால் முன் கொடுத்த வளைகள் காதலியின் கைகளிலிருந்து கழன்று விழுந்தன; இனிமேல் அவளை மணந்து பிரியாமல் இருப்பானா என்பதைத்தான் 'நல்லவைதானே' என் னும் இரண்டே வார்த்தைகளில் அமுக்கி வைத்து அவ்வளவு சமத்காரமாகக் கேட்டாள் தோழி.

இதை யெல்லாம் அவ் விளைஞன் அறியக் கூடாதவனா, என்ன? மனம், பணம் இரண்டும் உள்ளன; இனி மணந்தானே பாக்கி? ஆதலின் அவனும் விவாகத்திற்குச் சம்மதித்துத் தயார் என்பதுபோல் ஒரு புன்னகை பூத்தான்.

இனித் தோழி கூறிய பாட்டைக் கவனிப்போம். இது எட்டுத் தொகையுள் ஒன்றாகிய 'ஐங்குறு நூறு' எனும் நூலில் காணப் படுகிறது.

"வலம்புரி யுழுத வார்மண லடைகரை
இலங்குகதிர் முத்தம் இருள்கெட விமைக்குந்
துறைகெழு கொண்க! நீ தந்த
வறைபுனல் வால்வளை நல்லவோ தாமே."

[வலம்புரி: வலம்புரிச் சங்குகள், உழுத: ஊர்ந்து சென்ற, வார் மணல்: மிகுதியான மணலையுடைய, அடைகரை: கடலை அடுத்த கரையில், இலங்கு: விளங்குகின்ற, கதிர்: ஒளிபொருந்திய, முத் தம்: முத்துக்கள், இருள்கெட: இருள் நீங்கும்படி, இமைக்கும்: ஒளி விடுகின்ற, துறைகெழு: துறையோடு பொருந்திய, கொண்க: தலைவ.

அறைபுனல்: சப்திக்கின்ற நீரிலிருந்து கொள்ளப்பட்ட, வால் வளை (சங்கினால் ஆகிய) வெண்மையான வளைகள், நல்லவோ தாமே: நல்லவைதானே!]

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")

(சென்ற இதழின் தொடர்ச்சி)

## மாணவர் தினசரிக் கடமை

**கா**லை 4-20-க்கு பிரார்த்தனைக் கூட்டத்தில் மணி அசைந்து மாணவர்களைக் கரும யோகத்திற்கு ஆயத்தமாக்குகிறது. ஐந்து நிமிஷத்திற்குப் பிறகு மறுமுறை மணி யடிக்கப் படுகிறது. எல்லோரும் பிரார்த்தனைக் கூட்டத்தில் கூடுகின்றனர். மகன்வாடியின் துணைச் செயலாளர் திரு. பரதன் குமரப்பாவும் வித்தியாலய அதிபரும் (warden) அவரவர் இருக்கையில் அமர்கின்றனர். பிரார்த்தனை நடத்துபவர் பதிவுப் புத்தகத்தை எடுத்து எல்லோர் பேரையும் அழைக்கின்றார். மாணவர், அழைப்பிற்குப் பதிலளிக்கும் வகையில் "ஓம்" என்னும் பதிலுடன் அமர்கின்றனர். இறை வணக்கம் தொடங்குகிறது. இறை வணக்கம் காலைக்கென்றும், மாலைக்கென்றும் தனித்தனியாய், வெவ்வேறு கருத்துக்களுடன் அமைத்த பாக்களாகும். இப் பாக்கள் எல்லாம் ஹிந்தி மொழியிலேயே அமைக்கப்பட்டுள்ளன. இறை வணக்கம் ஆனதும் நால்வாடியில் கூறுகிறபடி "அஹிம்சா சத்தியஸ்த்தேயோ.............................." என்னும் தொடக்கத்துடன் கூடிய சூளுரை. இச் சூளுரை பதினொரு இலட்சியங்களைக் கொண்டது. இது முடிந்ததும் நன்கு, பண்ணுடன் பாடக்கூடியோர் எவரேனும் தங்கள் தாய்மொழியில் பாடலாம். திருநெல்வேலி-திரு. A. கிருஷ்ணன் தமிழ்ப்பாட்டுக்களை உணர்ச்சி பொங்கப் பொங்கப் பாடும் இயல்பினர். அவர் பாரதிபாட்டைப் பாடுந்தோறும் மொழியுணர்ச்சியில்லா வட நாட்டாரும் தம்மை மறந்து நுகர்வர். ஒருநாள் அவர், "எத்தனை ஜென்மங்கள் வந்து பிறந்தாலும் இந்திய நாட்டினில் வேண்டுவனே..." என்னும் பாடலைப்பாடி முடித்ததும் திரு. பரதன் குமரப்பா அவர்கள் திரு. கிருஷ்ணனைப்பார்த்து "நான் மிகவும் மகிழ்கின்றேன். நீ பாடிய பாடல் என்னுள்ளத்தைக் குழைத்துப் பரவசமாக்கி விட்டது. இது போன்ற இனிய பாடல்கள் தமிழில் உளவோ?" என்று வினவினர்.

## உடற் பயிற்சி

நாள்தோறும் இரவு பிரார்த்தனைக்குப் பின் மாணவர் அறிய வேண்டிய முக்கியச் செய்திகள் இருந்தால் திரு. பரதன் குமரப்பா அவர்கள் சொல்லி விடுவார். இவ்வாறு பிரார்த்தனை முடிவு பெறும். பிறகு, காலைக்கடன் முடியும். அதன் பின் உடற்பயிற்சிக்கான அலுவல்களைச் செய்யவேண்டும். எடுத்துக் காட்டாக வித்தியாலய விடுதிகள் துப்புரவு செய்வது, கக்கூசுகள் துப்புர

வார்க்குவது, கோதுமை அரைத்தல் ஆக இவ்விதம். உடற்பயிற்சிக்கான நேரங்களை வீணே கழிப்போருக்கு மகன்வாடியில் கடுகளவும் மதிப்பில்லை. யான், எப்போதும் கோதுமை யரைக்கவே விரும்புவேன். 1 சேர் கோதுமையை இருபத்து ஐந்து நிமிஷங்களில் அரைத்து விடக் கூடும்.

ஆறரை மணிக்கு மற்றோர் மணி. உடனே எல்லோரும் தட்டுகளைத் தூக்கிக்கொண்டு ஓடிவருங் காட்சி நகைப்பை யுண்டாக்கும். மாணவர்களில் பலர் 30 வயதுக்கு மேற்பட்டவர்கள். இருந்தும் என்ன? மாணவராகி விட்டாலே மாணவக் குறும்பும், விஷமமும் வந்து விடுகின்றன போலும். ஒரு நாள் எல்லோரும் தளியாவிற்கு வந்து வரிசையாய் உட்கார்ந்திருந்தனர். அன்றைய் பரிமாறும் முறைக்காரர் தளியாவை (தளியா—வெல்லம் போட்டுக் காய்ச்சிய கோதுமை நொய்க்கஞ்சி) ஊற்றிக் கொண்டே வந்தார். அப்போது 35 வயதுக்கு மேற்பட்ட ஆந்திர நண்பர் 'சட்க்' கென்று பக்கத்தில் ஆளில்லாமல் வந்திருந்த தட்டை யிழுத்து விட்டார். பரிமாறியவர் ஒரு கரண்டி தளியாவைக் கீழே வார்க்கும்படி நேர்ந்து விட்டது. வந்து விட்டது கோபம் பரிமாறியவருக்கு. "கிருஷ்ண மூர்த்தி எதற்கும் அளவு வேண்டும்; உன் விஷமத்தை நான் மன்னிக்க முடியாது" என்றார். திரு. கிருஷ்ண மூர்த்தி மன்னிக்கும்படி மன்றாடினார். எங்கும் ஒரே சிரிப்பு.

காலையில் இந்த தளியா முடிந்ததும் முடியாததுமா யிருக்கும் போதே தொழிற்கூட மணி எல்லோரையும் வேலை மேற் செல்லும் படி எச்சரிக்கும். அவரவர் தமக்குரிய வேலை மேற் செல்லுவர். வேலை யாவது, ஒவ்வொருவரும் தாமே விரும்பிப் பழகி வரும் வேலை யாகும். யான் பழகியது காணம். (செக்கு). தினம் ஐவர் அடங்கிய ஒரு கூட்டம் சமையல் அறையில் போய் கறி திருத்தல், ரொட்டிச் சுடல் ஆகியவற்றைச் செய்து தவசிப்பிள்ளைக்கு துணை செய்ய வேண்டும். வித்தியாலய தவசிப்பிள்ளை ஹரிஜன். சாதிக் கட்டுப்பாடு ஒழிந்து எல்லோருள்ளத்திலும் பரந்த நோக்கம் வளர வேண்டு மென்னும் உன்னத கருத்தோடுதான் அங்கு ஹரிஜனையே தவசிப்பிள்ளையாக அமர்த்தி யுள்ளார்கள்.

தொழிற் பயிற்சிக்குச் செல்வோர் 10½ மணிக்குத் திரும்பி வந்து நீராடல், ஆடை வெளுத்தல் ஆகியவை முடித்துப் பகலுணவுக்கு ஆயத்தமா யிருப்பர். பகல் 11 மணியானதும் மணி யொலித்து உண்ண வழைக்கும். சாப்பிடும் கூடத்தில் போட்டப் பட்டுள்ள மணைகளில் வந்து எல்லோரும் வரிசையாய் அமர்வர். பரிமாறும் முறையுடையார் உணவு பரிமாறுவர். அவர்களுடன், முறையில்லா திருந்தும் உணவு படைக்கும் பணியில் உற்சாக முடைய வேறு சிலரும் கலந்து கொண்டு தொண்டாற்றுவர். பரிமாறி முடிந்ததும் ஏதோவோர் சுலோகத்தை எல்லோருமாய்ச் சேர்ந்து உச்சரித்து, முடிவில் "ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி." என்று மும்முறை கூறி உண்ணத் தொடங்குகின்றனர்.

# என் படம்

(ரா. சு. மூர்த்தி.)

வழக்கம்போல் நான் ஒருநாள் சாயங்காலம் தனிமையாக மேரி அம்மையாரின் கல்லூரிக்கு எதிரில் சமுத்திரத்தை நோக்கி உட்கார்ந்திருந்தேன். வெங்கிடேஸ்வரர் ஆஸ்டலில் முதல் முதலில் சேர்ந்த தினத்திலிருந்தே நான் தினம் தோறும் சாயங் காலங்களில் கடற்கரைக்குப் போவது வழக்கம். அதிக மழையாய் இருந்தாலும் சரி, குளிரா யிருந்தாலும் சரி, இப் பழக்கத்தை மாத்திரம் நான் விடுவதில்லை. ஆனதினால், இச் சம்பவம் நடந்த சனிக்கிழமை யன்று, நான் சாதாரணமாக போவதைப்போல தான் சென்றேன். எப்போதும் உட்காரும் வாடிக்கையான மணல் மேட்டில் தான் உட்கார்ந்திருந்தேன். அப்போது எனக்கு அருகாமையில் மூன்று மனிதர்கள் வந்து உட்கார்ந்தார்கள். அவர்களில் இருவர் செல்வச் சீமான்களைப்போல் விளங்கினார்கள். அவர்களின் காதிலும் கைகளிலும் வைரக்கடுக்கன்களும், மோதிரங்களும் ஜொலித்தன. ஆனால் மற்றொருவர் அவ்விருவரின் குமாஸ்தாவைப்போல் தோன்றினார். அம் மூவருக்கும் வயதில் ஒருவருக்கொருவர் அதிக வித்தியாசம் கிடையாது. மொத்தத்தில் அவர்கள் நடுத்தரமான வயதும், கட்டுமஸ்தான தேகத்தை உடையவர்களாய் இருந்தார்கள். அவர்கள் அணிந்திருந்தது சுத்த கதர் தான். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அவர்கள் என்ன பேசினார்களோ எனக்குத் தெரியாது. அம் மூவரில் குமாஸ்தாவைப்போல் இருந்தவர் என் பக்கமாக வந்து, "தம்பி, மணி என்ன இருக்கும்?" என்று கேட்டார். "மணி சுமார் ஆறு இருக்கும்" என்று சொல்லி அப்போது தான் நான் அவர்களை கூர்ந்து பார்த்தேன்.

வந்தவர்:—"தம்பி எனக்கு ஒரு உபகாரம் செய்வாயா?" என்றார்.

நான்:—"என்ன உபகாரம்? என்னால் கூடுமானால் பார்க்கிறேன்......"

வந்தவர்:—"பிரமாதமாக ஒன்றுமில்லை. உனக்கு ரூபாய் 100 தருகிறோம். கஷ்டம் ஒன்றுமில்லை."

நான்;—"உபகாரம் என்றீர்களே, என்னால் ஆகக்கூடிய அவ் விஷயம் என்ன?"

வந்தவர்:—"உன் படம் தான் வேண்டும். எங்களுடன் வந்தால் உன்னை இரண்டு அல்லது மூன்றுமணி நேரத்தில் உன் னிருப்பிடத்திறகே திரும்பி கொண்டுவந்து விடுகிறோம்."

நான்:—"என் படமா? இதில் என்ன கஷ்டம்? சரி, நீங்கள் ரூ. 100 கொடுப்பதாகச் சொல்வதில் தவற மாட்டீர்களே? நீங்களோ எனக்கு முன் பின் தெரியாது. உங்களை நான் எப்படி நம்புவது?"

இதைக் கேட்டிருந்த அவ்விரு பிரபுக்களிலொருவர் "கோபால், இந்தா, இந்த 100 ரூபாய் நோட்டை அவரிடம் கொடு" என்றார்.

இதைக் கேட்டதும் எனக்கு அதிக ஆச்சரியமாக இருந்தது. கோபால் என்பவர் என்னிடம் ரூபாய் 100 நோட்டைக் கொடுத்தார். எனக்கு அப்போது, 'இதென்ன நான் விழிப்பில்தான் இருக்கிறேனா அல்லது சொப்பனம் தானா' என்று சந்தேகமுண்டாயிற்று. என் விரல்களிலொன்றை வாயில் வைத்து கடித்தேன். சுரீல் என்று வலித்தது. அப்போதுதான் எனக்கு நான் காண்பது உண்மை என்று தோன்றிற்று.

* * * * *

இதற்குள் அவ்விரு சீமான்களும் என்னிடம் அணுகி, "தம்பி, நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். நாங்கள் சொல்லியபடி மற்ற பாக்கி ரூ. 100-யும் படம் பிடித்ததும் உனக்குத் தருகிறோம். இப்போது கொடுத்ததை அட்வான்ஸ் என்று வைத்துக்கொள்" என்றார். நானும் தலையை அசைத்து என் சம்மதத்தை தெரிவித்தேன். பிறகு, நான் அம்மனிதர்களுடன் அவர்கள் ஏறி வந்த மோட்டார் வண்டியில் ஏறிச் சென்றேன். சிறிது நேரத்திற்கெல்லாம் வண்டி கீழ்ப்பாக்கம் பக்கமாக போய்க்கொண்டிருந்தது. கடைசியாக அம் மோட்டார் ஒரு பெரிய சோலையினுள் நுழைந்து சென்று கொண்டிருந்தது. அப்போது நன்றாக இருட்டிவிட்டது. ஆனதினால் என் கண்களுக்கு ஒன்றும் நன்றாகப் புலப்படவில்லை. வண்டியிலிருந்தவர்களில் ஒருவரும் ஒன்றும் பேசவில்லை. வண்டியும் ஒரு பங்களாவின் முற்றத்தில் போய் நின்றது. நாங்கள் எல்லோரும் கீழே இறங்கினோம். பிறகு நாங்கள் நால்வருமாக வெளிப்புறத்திலிருந்து பங்களாவின் உட்புறத்தில் பல பாகங்களைக் கடந்து சென்றோம். கடைசியாக, ஒரு ஹாலைச் சேர்ந்த விசாலமான அறையில் அவர்கள் என்னை இருக்கச் சொல்லி மற்றொரு பெரிய அறைப்பக்கமாக அவர்கள் சென்றார்கள். அந்த ஹாலின் மத்தியில் ஒரு மின்சார விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவர்கள் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் யாரோ நான் நுழைந்த வழியின் கதவை மூடி வெளிப்புறமாக தாள் போட்டார்கள். உடனே நான் அப்பக்கமாக சென்று கதவை தட்டி இழுத்துப் பார்த்தேன். கதவு வெளிப்புறத்தில் பொருத்தியிருந்ததால் என்னால் திறக்க முடியவில்லை. பல தடவை அக்கதவை ஓங்கித் தட்டினேன். அதற்கும் ஒரு பதிலும் கிடைக்கவில்லை. 'இதென்னடா, முட்டாள்தனமாக நமக்கு முன் பின் தெரியாதவர்களை நம்பி இங்கு வந்தோமே' என்று, நான் திகைத்து நின்றேன். அதே சமயத்தில் ஹாலில் எரிந்து கொண்டிருந்த மின்சார விளக்கு அணைக்கப்பட்டு ஒரே அந்தகாரமாய் விளங்கிற்று. என் கோபத்திற்கு அப்போது அளவே இல்லை. "இதென்ன சதி? மடையர்கள்? தடியர்கள்? எங்கேயடா போய் விட்டீர்கள்? பேடிகள்! கோழைகள்! எதற்காக என்னை இங்கு அழைத்து வந்தீர்கள்? உங்களை சும்மா விடுவேனென்று நினைக்கிறீர்கள்! பார், உங்களை என்ன செய்கிறேன்" என்று அதிக கூச்சலிட்டுக்கொண்டு அந்த இருண்ட அறையின் நாலாப்பக்கமுமாக அலைந்து ஓடினேன். எங்கும் நிசப்தம். ஒருவரும் இருப்ப

தாகத் தெரியவில்லை. இருட்டில் ஒன்றும் தெரியாமல் என் கோபத்தினால் பல தடவைகளில் அங்குள்ள சுவர்களில் முட்டிக்கொண்டேன். என் தலையிலும் கைகால்களிலும் ரத்த காயங்கள் ஏற்பட்டது. உறுமினேன், கருவினேன், கர்ஜித்தேன், பலவாறு அச்சதிகாரர்களைத் திட்டினேன். என்ன பயன்? ஒருவரும் எனக்குப் பதில் அளிக்கவில்லை. அவ்விடம் யாரும் இல்லா நிர்மானுஷ்யமான பேய்கள் வாசம்போல் இருந்தது. என் மனதிற்குள் பல பல எண்ணங்கள் தோன்றின. எதற்காக அப் பாபிகள் இவ்விடத்திற்கு என்னை அழைத்து வந்தார்கள்? என் உடம்பெல்லாம் சில்லிட்டு வந்தது. நீரில் மூழ்கினவனைப்போல் காணப்பட்டேன். அதே சமயத்தில் ஒருவிதமான வாசனை அவ்விடத்தில் வீசிற்று. நான் திடீரென்று மயக்கம் போட்டு கீழே விழுந்து விட்டேன்.

* * * *

எவ்வளவு நேரம் நான் மயங்கி இருந்தேனென்று எனக்குத் தெரியாது. எனக்கு மறுபடியும் உணர்வு வரும்போது நான் வீழ்ந்து கிடந்த அறையில் மங்கலாக ஒரு விளக்கு எரிந்துகொண்டிருந்தது. எனக்குப் பத்தடி தூரத்தில் ஒரு படுக்கை காணப்பட்டது. அதில் ஒரு அழகிய மங்கை தூங்கிக்கொண்டிருப்பது போல் தோன்றிற்று. மெதுவாக என் கையினால் நான் என் நெற்றியைத் தடவிக் கொடுத்தேன். இன்னும் வேர்வைகள் நிறைந்திருந்தன. சரேலென்று எழுந்து கட்டிலில் படுத்திருக்கும் மாது யார் என்பதை யறிய அருகில் சென்றேன். அவள் பார்ப்பதற்கு ஏதோ மயக்கம் போட்டு படுத்திருப்பதைப்போல் தோன்றிற்று. அவள் படுத்திருந்த தலையணை முழுதும் இரத்தத்தில் தோய்ந்திருந்தது. அம்மங்கின வெளிச்சத்தில் அவ்வறையைச் சுற்றிப் பார்த்ததில் ஒரு மூலையில் கூஜாவொன்று வைக்கப்பட்டிருந்தது. அக் கூஜா தண்ணீரைக் கையிலெடுத்து அப் பெண்மணியின் முகத்தில் தெளித்தேன். அதே சமயத்தில் அவள் கண்கள் திறக்கப்பட்டன. "ஆ, காதலா! நான் எங்கிருக்கிறேன்?" என்றாள். எனக்கு அப்படியே தூக்கி வாரிப்போட்டது. 'இது என்ன, இவ் வீட்டில் என்னமோ கொலை நடந்திருக்கிறது போல் தோன்றுகிறதே! அப் பழியை நம்மீது சுமத்துவதற்குத்தான் அப் பாழும் சதிகாரர்கள் என்னை ஏமாற்றி அழைத்து வந்தார்கள் போலும்! என்று நினைத்தேன். கை கால்களெல்லாம் விலவிலவென்று உதற லாயிற்று. என்னுதை எண்ணமெல்லாம் எண்ணினேன். என்ன செய்வது என்று தோன்றவில்லை. அதற்குள் அப் பெண், 'அன்பா, ஏன் சும்மா நிற்கிறாய்? நான் இறப்பதற்குள் எனக்கு உன் அன்பு ததும்பும் ஒரு முத்தம் கொடுக்க லாகாதா?" என்று கெஞ்சிக் கேட்டாள். அப்போதுதான் நான் அவள் சாகும் தருவாயில் இருப்பதாக எண்ணினேன். அவள் என்னை சற்று நன்றாக ஏற இறங்கப் பார்த்து, "என் கண்ணாளா! என்னிடத்தில் உனக்கு உண்மை காதலில்லையா? என்ன யோசிக்கின்றாய்? உன் கைக்களை என் கைமேல் வை—கடவுளின் மேல் ஆணை! கடைசியாக

என்னை ஒருமுறை உனக்குத் தெரிந்த—என்னைக் கூப்பிடும் பல வர்ணனை மொழி யொன்றில் கூப்பிடு; சீக்கிரம்; இதோ நான் இறப்பதற்கு இன்னும் சில விநாடிகளே. யிருக்கின்றன" என்று மனச் சோர்வுடன் பிரலாபித்தாள்.

எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அவள் சாவப் போவது நிச்சயம் என்று மாத்திரம் தோன்றிற்று. எனக்கு அவள் முன் பின் தெரியாதவளாய் இருந்தும் அவள் என்னைத் தன் காதலனுக்கவே நினைத்து வற்புறுத்துவதை மறுக்க என்னால் இயலவில்லை. என்னமோ! அவள் ஆத்மாவாவது சாந்தி யடை யட்டும் என்று அவள் முகத்தோடு முகம் வைத்து ஒரு முத்த மிட்டு, "கண்மணி! கூடிய சீக்கிரம் நான் உன்னை யடைவேன்" என்றேன்.

"ஆ, ஆ, ஆ" வென்று பெருத்த ஓசையுடன் சிரித்துக் கொண்டு நான்கு புறத்திலும் உள்ள கதவுகளைத் திறந்து கொண்டு என்னை அழைத்து வந்த அந்த இரு கனவான்களும், கோபாலனும் வந்து, "தம்பி, வெகு அழகாய் நடித்து விட்டாய்; உனக்கு அநேக கோடி வந்தனம்" என்றார்கள்.

எனக்கு கோபம் ஒரு புறமும், அவர்கள் என்னைப் பரிகசித்து சிரித்தது மற்றொருபுறமும், என்னை எதற்காக ஏமாற்றி அழைத்து வந்தார்கள்? ஏன் அந்த இளம்பெண்ணைக் காயப்படுத்தி கொன் றிருக்கிறார்கள்? ஐயோ பாவம்! அவள் இப்போது இறந்திருப் பாள்! இவர்களை சும்மா விடக்கூடாது. என்றெல்லாம் எனக்கு தோன்றிற்று. முதல் முதலாக என்னிடம் பேசிய தனவந்தர், "தம்பி உனக்கு இன்னும் புரியவில்லையா—? நாங்கள் ஒரு பட முதலாளிகள். ஒரு படத்தில் கதா நாயகனாக இருந்தவர் இந்த கடைசி சீன் எடுப்பதற்குள் திடீரென்று இறந்து விட்டார். அவர் அங்க அடையாளம், முகபாவனை, வெட்டு எல்லாம், உன்னையே ஒத்திருக்கும். சிறிது காலமாக நாங்கள் எத்தனையோ இடங்க ளுக்கு சென்று அவரைப்போல் ஒரு நடிகரைத் தேடினோம். ஆனால் அகஸ்மாத்தாக, தம்பி! இன்று எங்கள் கண்களில் நீ அகப்பட்டாய். எங்களுக்கு படம் பூர்த்தி யாகிவிட்டது" என்று கூறி, பஞ்சணையில் படுத்திருக்கும் பெண்ணை நோக்கி, "மிஸ் செல்லம்! எழுந்திரு நடித்தது போதும்" என்றனர்.

அப் பெண்ணும் புன் முறுவலுடன் எழுந்து உட்கார்ந்தாள். அப்போது தான் எனக்கு, அவள் காயப்பட்டதுபோல் செய்தது இரத்தப் பெருக்கு இதெல்லாம் படம் பிடிப்பதற்காகச் செய்த மேக்-அப் (make up) என்று தெரிந்தது.

அப்பட முதலாளிகள் நான் ஒரு டைரக்டர் உதவியும் இல் லாமல் சுதாவாக நடித்ததில் படம் எத்தனையோ அழகாக இருக் கிறதாகச் சொல்லி மெச்சி எனக்கு சேரவேண்டிய மிகுதியுள்ள ரூபாயுடன் இன்னும் ஒரு 100 ரூபாயும் போட்டுக் கொடுத்தார் கள். நான் மறுபடியும் ஆஸ்டலில் வந்து சேர்ந்தபோது மணி அப்போது தான் ஒன்பது அடித்தது. அன்பர்களே! என் படம் வெள்ளித்திரையில் வரும்போது பார்க்கத் தவறாதீர்கள்!

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)

★

### 17 சனி உலகமும்—பல பாகமும்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

சனிக் கிரகம் தென் சாயலான மேற்குத் திக்கின் ஆதிக்கங் கொண்டது. இருண்ட வண்ண முடையது; தமோ குணப் பிரதானமானது. ஆயினும், தூய்மைக்கே செலுத்தும் துணையாய் எல்லைகள் யாவினும் விளங்குகின்றது.

வசீகரமற்ற தோற்றம்—வரவேற்புக்கு எவரும் பின்வாங்கும் நிலை இவை யுடையது. ஆழத்தில் பதிவான கண்கள்—இளைத்த நெடிய வடிவம்—நரம்பு எழுந்த ஆக்கை—நரம்பு பலவீனம்—அகால வார்த்திகம் சனியின் சீர்கள் ஆகும்.

உடற்கூறில் மெல்லிய சிறு நரம்புகள்—அவற்றின் ஆளுகை கொண்ட சக்கரங்கள்—எலும்புகளில் முக்கிய கணுக்கள்—வாத நாடி—நகம்—பற்கள் இவைகளும், மூத்திரக் கருவி — கழிவுப் பொருள் தேக்கங்கள் இவைகளும் சனிக் கிரகத்தின் பலன்களுக் குரியனவாக விருக்கின்றன.

வாயுவின் கூறில் குளிர் ஆதிக்கமுடைய சனி வாதக்ரம்—பக்ஷவாதம் பூட்டு அல்லது கீல்வாதம்—கல்லடைப்பு—மூத்திர க்ருச்ரம்-மூலரோகம் ஆகிய நோய்களுக்கு அதிகாரங் கொண்டது.

உலோகங்களில் கருவங்கம்—இரும்பு—உருக்கு—கனிவயல்கள் இவைகளும், நவரத்னங்களில் குற்றமற்ற நீலமும் சனிக் கிரகத் திற் குரியனவாகும்.

தாமதமுள்ள போக்கு — தட்டுத்தடைகள் நிறைந்த செல் வாக்கு—சோம்பல் — கடின உழைப்பு—சஞ்சாரம்—அலைச்சல்—அகால போஜனம்—கவலை ஆகியன இதன் பொது இயலாக விருக்கும்.

புத்திபாக அம்சங்களில் ஆராய்ச்சி நோ்மை கொண்ட தென்னலாம். உண்மை காணுவதில் விடாமுயற்சி—சோதனை மிகுந்த பரிசுத்த விருத்திகளில் காலந் தாழ்த்த வெற்றி இவை சனியின் தனி இயல்கள். இந்த இயல்பில் எத்துணை தான் ஒருவர் தூய்மையாளராக விருப்பினும், நேர்மையினின்றும் பிறழ்ந்து விடுவதற்கும்—நெறியற்ற நடவடிக்கைகளில் புகுவதற்கும் ஆக நேரும்படி இருக்கும். இந்த தனி இயற் பலன்களில் சோதனை மிக்க சந்தர்ப்பங்களை தக்கபடி சமாளித்துக் கொள்பவர் பெரிய வெற்றிகளையும்—கீர்த்திகளையும் எய்துகின்றனர், இவ் இயல்பில் உலகில் எந்த சித்தியும்—வெற்றியும் நேர்மைகளிலேயே தான் ஒரு

வருக்குச் சிரமமாக விருந்தபோதிலும் கிடைக்கக் கூடியது என்பதை நன்கு விளக்கி விடுகிறது.

வீணான மனக் குழப்பம்—அடிமை விருத்தி—தீர்க்கப்படாத கடன்கள்—துணிவு—அந்நிய தேசங்களில் வாசம்—ஒட்டுக்குடி—பிறர் உடமைகளை அனுபவித்தல்—நீசர் உறவு — தனிமையில் பிரியம் — அங்கங்களில் அசூயை சீக்கிரம் — வெகு சுலபத்தில் பொறுமையை இழந்து விடுவது—பழமைகளில் வெறுப்பு—புதுமைகளைப் பெருக்குவதில் ஆசை—மெலியாரைக் கண்டு அஞ்சுதல்—வலியாரை எள்ளுதல்—நட்வடிக்கைகளுக்குரிய பொழுதில் அசிரத்தை—சிறை—பந்தனம்—நீதிஸ்தல விரோதம்—அதிருஷ்டபாவங்கள் — எட்ட எட்ட தூரத்தே செல்லுதல் — வெறுப்பால் துறவு — மறைவான இருப்புகள் — இரகசியமான செயல்கள்—கீழோர்களால் அவமானம் இவை யெல்லாம் சனியின் சிறப்பியல்கள்.

**ஆயுஷ் காரகன்—ரந்திர காரகன்—விதி முதல்வன்** என்று பல பாகம் சனிக் கிரகத்தைப் பற்றிக் கூறுகிறது. ஒருவருக்கு இவ்வளவுதான் ஆயுட்கால அளவு என்றும், அந்தக் காலத்துள் நிகழ வேண்டிய பலன்கள் இன்ன இன்னதுதான் என்றும் சனிக் கிரகத்தைக் கொண்டு காணக் கூடியதாக விருக்கிறது. இதில் "நிகழ வேண்டிய பலன்கள்" என்றால் முன்னாலேயே நிர்ணயஞ் செய்யப்பட்டவை என்று பொருள் கொள்ளத் தக்கதாக விருப்பதை 'மறு ஜென்ம'க் கொள்கையை எதிர்ப்பவர்களுங்கூட அங்கீகரிக்கின்றனர். ஒரு ஜாதகத்தின் விதியைக் காட்டும் கிரகம் சனிதான் என்பது கிழக்கிலும்—மேற்கிலும் எங்கும் எக்காலத்தும் ஏகோபித்து ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கும் பெரிய உண்மையாகும். ஆனால், அதற்காக 'மறு பிறப்பு'க் கொள்கையை இங்கு வற்புறுத்துவதாக எவரும் கருத வேண்டியதில்லை. முன் ஜென்மத்தில் செய்தவற்றின் பலனை இந்த ஜென்மத்தில் நிகழுவதற்கு விதிக்கப்பட்டவை என்றுதான் இருக்க வேண்டு மென்பதில்லை. விஞ்ஞானம் 'சனி விதியைக் காட்டும் கிரகம்' என்பதற்கு ஒரு தக்க விளக்கத்தை வைத்திருக்கிறது. ஜீவனுடைய வாஸத்திற்கேற்ற உடலுக்கு வித்திடப்பட்ட பொழுது, அதில் வாய்த்த சக்திகளின் அமைப்புகளில் வரும் அனுபவங்களுக்குரிய பலன்கள் தாம் 'விதி' என்றும், அந்த 'விதி'யையே சனிக் கிரகம் விளக்குவதற்கு அதிகாரம் கொண்டது என்பதேயாகும். எவ்விதத்திலும், அனுபவத்திற்கு வரும் பலன்களான விதியை சனிக் கிரகம் காட்டுவதால், அதனை '**விதி முதல்வன்**' என்றது பல பாகம்.

இவ்விதம் எல்லாக் கிரகங்களுக்கு மேலாக ஆயுளையும்—அந்த ஆயுளில் நிகழும் பலன்களான விதியையும் தனது காரகமாக (அதிகாரமாக)க் கொண்ட சனிக் கிரகத்தின் சரியான பலன்களை ஒருவருடைய ஜாதகத்தில் முதலில் தெரிந்து கொள்ள வேண்டியது முதற்கண் இருப்பதாகும். அதற்குரிய ஐந்துவித பலன்களை அடுத்த இதழில் விவரிப்போம்.

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப்-சு. மீ. கணபதி)

★

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

"நீங்கள் இப்பொழுது சொல்லியதை ஒரு வருடத்திற்கு முந்தி சொல்லி யிருந்தால் நானும் ஒப்புக்கொண் டிருப்பேன். எனக்கு மணம் செய்து கொள்ளும் எண்ணம் கிடையாது. கடைசிவரை இப்படியே இருக்கத் தீர்மானித்து விட்டேன். ஆகையால் நீங்கள் எது சொல்லிய போதிலும் என் தீர்மானத்தை மாற்றுவதென்பது முடியாது. நான் உங்களுக்கு வாக்குக் கொடுத்திருக்கிறபடி என்னால் இயன்றது ஐநூறு ரூபாய் வரை சுவர்ணத்தின் விவாகத்துக்குக் கொடுக்கிறேன். நல்ல வரனாக, அதுவும் என்னிலும் மேம்பட்டவனாகவே ஏற்பாடு செய்கிறேன். அந்த விஷயத்தில் உங்களுக்குச் சந்தேகமே வேண்டாம். இப்பொழுதி லிருந்தே முயற்சி எடுத்துக் கொள்கிறேன். நீங்கள் கூறியபடி உங்களுடைய கடைசி நாட்களை என்னுடனிருந்தே கழிக்கலாம். ஒரு குறைவும் ஏற்படாமல் பார்த்துக் கொள்வது என் பொறுப்பு" என்றான் வாசு.

பத்மாசனி:—"நம்ம சுவர்ணம் அழகு இல்லையா, படிப்பு இல்லையா, குடும்ப நிர்வாகம் தெரியாதவளா, அல்லது சூடிகை யில்லையா-எது இல்லை? உனக்குத்தான் வயது அதிகமாகி விட்டதா? சம்பாத்திய மில்லையா? குடும்பத்தைக் காப்பாற்றத்தான் சக்தி யில்லையா? எதற்காகத் தீர்மானிக்க வேண்டும்? உன் வைராக்யம் அதிக நாட்கள் நீடிக்குமென நினைக்காதே. அவரவர் காலாகாலத்தில் செய்ய வேண்டியவைகளைச் செய்ய வேண்டுமே. இதை யெல்லாம் நன்றாக நினைத்துப் பார். அசட்டுத்தனமான இந்த விஷயங்களிலெல்லாம் பேசுவது நன்றாக இல்லை. என்னமோ நான் உன்னை விடப் பெரியவளாகவும், அனுபவம் தெரிந்தவளாகவு மிருப்பதால் நான் சொல்கிறேன்."

வாசு:—"நீங்கள் கூறுவது எல்லாம் தப்பு என நான் சொல்லவில்லை. ஒரு தடவை தீர்மானித்து விட்டேனானால் மறுபடி மாற்றுவதென்பது இது வரையிலும் கிடையாது. தவிரவும் நான் எதைப்பற்றியாவது தீர்மானிக்கு முன், தகுந்த காரணங்களின்றி முடிவுக்கு வரமாட்டேன். இந்த விஷயத்தைப்பற்றி இப்பொழு தென்ன?"

பத்மாசனி:—"அதென்ன அப்படிச் சொல்கிறாய். உனக்கு இன்னும் உலகம் தெரியாது. பெரியவர்கள் இருந்து நடத்திவைக்க வேண்டிய காரியம். நீ கெட்டுப் போகும்படி நான் புத்தி சொல்வேனா? சீக்கிரம் இருவரும் கல்யாணம் செய்து கொள்ளத்தான் வேண்டும். உங்கப்பா உயிருடன் இருக்கும் பொழுதே நடத்தினால் அவருக்கும் திருப்தியாக இருக்கும். அவரும், நீ சுவர்ணத்தை மணந்து கொள்வதை விரும்புவார். 'சுபஸ்ய சீக்கிரம்' என்பார்கள். சீக்கிரத்திலேயே உங்கப்பாவைக் கலந்துகொண்டு முகூர்த்தம் வைக்கவேண்டும் என்பதுதான் என் எண்ணம். சுவர்ணத்திற்கும் உன்னைப் பிடித்திருக்கிறது. வேறு உனக்கு ஆட்சேபனை இருக்க நியாய மில்லை."

வாசு:—"அம்மா! நீங்கள் கூறுவது சரிதான். இருந்தாலும் இன்னும் ஒன்றிரண்டு வருடங்களுக்காவது நான் இப்படியே இருக்கப் போகிறேன்.

அது வரையிலும் சுவர்ணத்திற்கு மண முடிக்காம லிருந்தால் பார்த்துக் கொள்ளலாம். மணி அதிகமாகி விட்டதே."

பத்மாசனி:—"மணி கிடக்கிறதடா! தினமா இதுமாதிரி விழித்துக் கொண்டு பேசப் போகிறோம்? நீயும் லீவி லிருக்கிறாய்; பகலில் தூங்கினால் போகிறது. ஆனால் தீர்மானமாக இரு வருஷங்களுக்குள் மணந்துகொள்ள முடியாதா என்பதை யோசித்துச் சொல். மிகுந்த ஆசையுட லிருக்கும் என்னை இதுபோன்ற பேச்சுக்களைக் கேட்கும்படி செய்வது நன்றாயிருக்கிறதா? சுவர்ணத்தை இன்னும் இரண்டு வருடங்களுக்கு மணம் செய்து கொடுக்காம லிருத்தல் சாத்தியப் படாது. ஒன்று உனக்கு இஷ்டமில்லை என்றால் சொல்லி விடேன். விஷயம் தீர்ந்து விடுகிறது."

வாசு:—"அப்படியில்லை. சில காலமாகவே தனிமையில் வாழ்வதில் தான் என் மனம் செல்கிறது. குறைந்தது இன்னும் ஒரு வருடத்திற்கு நான் மணந்துகொள்ள முடியாது. நான் இவ்விதம் கூறுவதற்காக உங்கள் பேச்சைத் தட்டிப் பேசுகிறேன் என நினைக்கக் கூடாது. எனக்கு விருப்பு வெறுப்பு ஒன்றும் கிடையாது. ஆகவே சுவர்ணத்தை நான் விரும்பவில்லை என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. அவசியம் நான் அவளை மணந்து கொள்ள வேண்டு மென்றால் குறைந்தது ஒரு வருஷம் அவள் காத்திருக்க வேண்டும் என்று தான் நான் கூற முடியும்."

பத்மாசனி:—"சரி. நீ சொல்கிறபடியே ஒரு வருஷ மல்ல பல வருஷங்கள் வேண்டுமாகிலும் பொறுத்திருக்கிறேன். அதன் பின்பு உன் மனம் மாறாதிருக்கும் என்பது என்ன நிச்சயம் என்று எனக்குப் புலப்படவில்லை. இதெல்லாம் வீண் வாதம். பிரயோசன மற்றது. விஷயத்தை நேரடியாகப் பேச வேண்டும்."

வாசு:—"நீங்கள் சொல்வது போல் சுவர்ணம் காத்திருந்து, என் மனதும் மாறினால் நான் செய்து கொள்ளத் தடையில்லை. இதை யெல்லாம் பற்றிப் பேசுவதால் உருப்படியாக விளையக்கூடியது ஒன்று மில்லை. தவிரவும் அவரவர் பிராப்தம் எப்படி யிருக்கிறதோ யார் கண்டார்கள்? உலகில் எதுவுமே நிச்சய மற்றதாக இருக்கிறது. நாம் எவ்வளவுதான் திரும்பத் திரும்பப் பேசினாலும் ஒன்றுதான். பிராப்தமிருப்பின் கண்டிப் பாய் யார் மறுத்தாலும் நடந்தே தீரும்."

பத்மாசனி:—"நமது மனது ஒப்பினால் தானே பிராப்தத்தைப் பற்றிப் பேசுவதற்கு. உனக்கு மன மில்லை என்றே தெரிகிறது. வெளிப்படையாகச் சொல்லி விடு. இல்லாவிடில் உன் தகப்பனார் சம்மதித்தாலாவது சரி என் பாயா?"

வாசு:—"நான் சொல்லக் கூடியவைகளை எல்லாம் சொல்லி விட்டேன். தகப்பனாரும் அல்லது மற்றவரும் கட்டாயப் படுத்தினால் கூட இன்னும் ஒரு வருஷத்திற்கு நிச்சயமாக அதைப்பற்றி நினைக்கவும் மாட்டேன். அதன் பின்னர் நடக்க வேண்டிய விஷயத்தைப் பற்றிப் பேச எனக்குத் தைரியம் கிடையாது. நாளை என்ன நடக்கும் எனத் தெரியாதபோது, ஒரு வருஷத்திற்குப் பின்பு என்ன நடக்கும் எனச் சொல்வது முடியாது. நான் கூறியதுபோல், விதியிருந்தால் நடை பெறுகிறது. இதெல்லாம் மனுஷ்ய எத்தனமல்ல."

பத்மாசனி:—"உன் வேதாந்தமும் உபன்யாசமும் கேட்பதற்காக, போகவர இருபத்தி ஐந்து ரூபா செலவு செய்து வரவில்லை. நீ பேச்சில் வெட்டொன்றும் துண்டு இரண்டுமாகப் பேசும் பொழுது எனக்குத் தாட்சண்யமென்ன? நீ சுவர்ணத்தை மணப்பதா யிருந்தால் மட்டிலும்தான், நீ [illegible] யபடி நான் இங்கிருத்தல் சாத்தியம். இல்லாவிடில் அடுத்த ரயிலைப் ப

வேண்டியததுதான். இதுதான் என் தீர்மானம். நான் இங்கிருப்பதோ, போவதோ உன் பதிலைப் பொறுத்ததுதான்."

"நான் காலையில் உங்களுக்குப் பதில் சொல்கிறேன்" எனக் கூறி வாசு படுப்பதற்கு வெளியில் சென்றான். அவர்களிருவரும் அறைக்குள்ளேயே படுத்துக் கொண்டார்கள். தாயும் மகளும் ஒரே சிந்தனையுடன் ஒருவர்க்கொருவர் பேசாமலே படுத்திருந்தனர்.

வாசு வெளியில் வரும்பொழுது பாதி இரவுக்கு மேலாகி விட்டது. சென்ற நான்கு இரவுகளாக அவனுக்குச் சரியான நித்திரை யின்மையால் அவன் உடல் நலம் பாதிக்கும்போல் இருந்தது. மனத்துன்பமும் கூட இருந்தது. இப்பொழுது வந்தவர்களால் துன்பம் உண்டாகியது. அவன் மனம் பெரிய போராட்டத்தில் ஈடுபட்டது. கடமையை நினைத்து மணம் செய்து கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. தகப்பனாரைக் காப்பாற்றும் பொறுப்பினால் தான் மனக்கவலை ஏற்பட்டது. அதனால் அந்தக் கடமைக்காக செய்து கொள்வதா? ஒரு வேலைக்காரியையே அமர்த்திக் கொண்டால் அதுவும்கூடக் கொஞ்சம் சம்பளம் கொடுப்பதாகக் கூறினால் அவள் கவனித்துக் கொள்கிறாள். அப்படியு மில்லாவிடில் நன்றாக நடந்து கொண்டால் வருஷா வருஷம் சம்பளத்தை உயர்த்துகிறேன் என்று சொன்னால் எந்த வேலைக்காரரும் சரியாகவே நடந்து கொள்வார்கள். இருப்பினும் உறவினர் போன்று மற்றவர்கள் ஆவார்களா?...ஆகமாட்டார்கள். வாஸ்தவந்தான். உறவினர் என்றால் செய்யமுடியாம லிருக்கும்பொழுது நம் எதிரிலேயே, நம்மை நொந்து கொள்வார்கள். அதிகாரமும் செய்யத் தொடங்குவார்கள். வீட்டிலிருந்து சாமான்களை அப்புறப்படுத்தினாலும் நாம் கேள்வி கேட்க முடியாது. கேட்டால் உடனே மூட்டையைக் கட்டிக்கொண்டு எங்கேயாவது கிளம்பி விடுவார்கள். 'நம் பாடு, திடீரென்று ஆள் இல்லை என்ற நிலைமைக்கு வந்துவிடும். தவிரவும், நம் பூர்வோத்திரங்களில் ஏதாவது கதையுடன் வெளி வந்து கொண்டிருக்கும். வேலைக்காரர் எனில் இவ்வளவு துன்பம் இருக்காது. உறவினரிடம் ஓங்கிச் சொல்லவும் வழியில்லை.

(தொடரும்.)

---

(29-ம் பக்கத் தொடர்ச்சி)

கத்தைப் புகுத்தி மேன்மேலும் குழப்புகிறார் என்று தெரிய வில்லை. இதைக் கண்டு பிடித்த இவரே மேல்கண்ட நூலில் பல இடங்களில் தவறியிருக்கிறார். சில உதாரணங்கள் தருவோம். ஒரு விடத்தில் வேற்ச் சனகன் என்றும் இன்னொரு விடத்தில் வேற்கண்ச்சிறு என்றும் மேற்செல, விற்கால் அனற்படு, நுட்சிலம்பி, கட்சிலம்பி, பாற்கடல்த் தரங்கம், மாத்திரையிற் கடல், நற்றவர், புண்டரீகக்கட் புரவலன் என்றும் அவரே பிழைபட எழுதியிருக்கிறார்.

நாம் கடைசியாக, க. கம்பரைக் கேட்டுக் கொள்வது—எச்சரிப்பது என்ன வென்றால், தாங்கள் எவ்வளவோ தமிழுக்குச் சேவை செய்திருக்கலாம். இன்னம் செய்யக் காத்துக்கொண் டிருக்கலாம். அதனால் தாங்கள் தமிழை எப்படி வேண்டுமானாலும் சிதைக்க உரிமை கிடைத்ததாகாது. உண்மையில், தமிழ் அன்னைக்கு உழைக்க விருப்ப மிருந்தால், தங்களின் தான் என்ற அகம்பாவத்தை விட்டுத் தற்சமயம் உள்ள தமிழிலே எழுதவும்.

இதை முதல் எச்சரிக்கையாக எடுத்துக் கொள்ளும்படி கூறுகிறோம். ...ருட்டு வழியிலே செல்வார் ஆயின், மீண்டும் மீண்டும் யாவற்றையும் ...க் கொணர நேரும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## சுபானு ஹு ஆடிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | •புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 19 | 35 | 48 | 90 | 17 | 263 | 21 | 13 | 16 | 89 | 15 | 100 | 34 | 134 | 25 | 58 | 00 | 114 | 09 |
| 2 | 19 | 39 | 45 | 91 | 16 | 278 | 29 | 13 | 56 | 91 | 24 | 100 | 47 | 135 | 11 | 58 | 07 | 114 | 06 |
| 3 | 19 | 43 | 42 | 92 | 13 | 293 | 33 | 14 | 37 | 93 | 32 | 101 | 00 | 135 | 55 | 58 | 14 | 114 | 02 |
| 4 | 19 | 47 | 38 | 93 | 11 | 308 | 37 | 15 | 17 | 95 | 39 | 101 | 13 | 136 | 39 | 58 | 21 | 113 | 59 |
| 5 | 19 | 51 | 35 | 94 | 08 | 323 | 06 | 15 | 57 | 97 | 45 | 101 | 26 | 137 | 21 | 58 | 28 | 113 | 56 |
| 6 | 19 | 55 | 31 | 95 | 05 | 337 | 35 | 16 | 37 | 99 | 50 | 101 | 40 | 138 | 03 | 58 | 35 | 113 | 53 |
| 7 | 19 | 59 | 28 | 96 | 02 | 351 | 16 | 17 | 17 | 101 | 53 | 101 | 53 | 138 | 43 | 58 | 42 | 113 | 50 |
| 8 | 20 | 03 | 24 | 96 | 59 | 4 | 56 | 17 | 56 | 103 | 56 | 102 | 06 | 139 | 22 | 58 | 48 | 113 | 47 |
| 9 | 20 | 07 | 21 | 97 | 56 | 17 | 51 | 18 | 36 | 105 | 56 | 102 | 19 | 140 | 00 | 58 | 55 | 113 | 44 |
| 10 | 20 | 11 | 17 | 98 | 53 | 30 | 46 | 19 | 16 | 107 | 56 | 102 | 33 | 140 | 38 | 59 | 01 | 113 | 41 |
| 11 | 20 | 15 | 14 | 99 | 50 | 43 | 08 | 19 | 55 | 109 | 53 | 102 | 46 | 141 | 13 | 59 | 08 | 113 | 37 |
| 12 | 20 | 19 | 10 | 100 | 47 | 55 | 29 | 20 | 34 | 111 | 50 | 102 | 59 | 141 | 48 | 59 | 14 | 113 | 34 |
| 13 | 20 | 23 | 07 | 101 | 47 | 67 | 29 | 21 | 13 | 113 | 44 | 103 | 13 | 142 | 21 | 59 | 21 | 113 | 31 |
| 14 | 20 | 27 | 04 | 102 | 42 | 79 | 28 | 21 | 52 | 115 | 37 | 103 | 26 | 142 | 53 | 59 | 27 | 113 | 28 |
| 15 | 20 | 31 | 01 | 103 | 39 | 91 | 17 | 22 | 31 | 117 | 28 | 103 | 39 | 143 | 23 | 59 | 34 | 113 | 25 |
| 16 | 20 | 34 | 57 | 104 | 36 | 103 | 06 | 23 | 09 | 119 | 18 | 103 | 52 | 143 | 53 | 59 | 40 | 113 | 22 |
| 17 | 20 | 38 | 54 | 105 | 33 | 114 | 54 | 23 | 48 | 121 | 05 | 104 | 05 | 144 | 20 | 59 | 46 | 113 | 18 |
| 18 | 20 | 42 | 50 | 106 | 30 | 126 | 42 | 24 | 26 | 122 | 52 | 104 | 19 | 144 | 47 | 59 | 52 | 113 | 15 |
| 19 | 20 | 46 | 47 | 107 | 27 | 138 | 38 | 25 | 04 | 124 | 36 | 104 | 32 | 145 | 11 | 59 | 58 | 113 | 12 |
| 20 | 20 | 50 | 43 | 108 | 24 | 150 | 34 | 25 | 42 | 126 | 19 | 104 | 45 | 145 | 34 | 60 | 04 | 113 | 09 |
| 21 | 20 | 54 | 40 | 109 | 21 | 162 | 51 | 26 | 20 | 128 | 00 | 104 | 58 | 145 | 54 | 60 | 10 | 113 | 05 |
| 22 | 20 | 58 | 36 | 110 | 18 | 175 | 07 | 26 | 57 | 129 | 40 | 105 | 12 | 146 | 14 | 60 | 16 | 113 | 02 |
| 23 | 21 | 02 | 33 | 111 | 15 | 187 | 57 | 27 | 34 | 131 | 18 | 105 | 25 | 146 | 31 | 60 | 22 | 112 | 59 |
| 24 | 21 | 06 | 29 | 112 | 12 | 200 | 46 | 28 | 11 | 132 | 55 | 105 | 38 | 146 | 47 | 60 | 28 | 112 | 56 |
| 25 | 21 | 10 | 26 | 113 | 09 | 214 | 21 | 28 | 48 | 134 | 29 | 105 | 51 | 147 | [illegible] | 60 | 33 | 112 | 53 |
| 26 | 21 | 14 | 23 | 114 | 06 | 227 | 56 | 29 | 25 | 136 | 03 | 106 | 05 | 147 | 12 | 60 | 39 | 112 | 50 |
| 27 | 21 | 18 | 20 | 115 | 03 | 242 | 20 | 30 | 02 | 137 | 34 | 106 | 18 | 147 | 20 | 60 | 45 | 112 | 47 |
| 28 | 21 | 22 | 16 | 116 | 00 | 256 | 44 | 30 | 38 | 139 | 05 | 106 | 31 | 147 | 29 | 60 | 51 | 112 | 44 |
| 29 | 21 | 26 | 13 | 116 | 57 | 271 | 46 | 31 | 14 | 140 | 33 | 106 | 44 | 147 | 33 | 60 | 57 | 112 | 40 |
| 30 | 21 | 30 | 09 | 117 | 54 | 286 | 47 | 31 | 50 | 142 | 00 | 106 | 58 | 147 | 37 | 61 | 02 | 112 | 37 |
| | | | | | | | | | | | | | | (வ) | | | | | |
| 31 | 21 | 34 | 06 | 118 | 51 | 301 | 55 | 32 | 26 | 142 | 25 | 107 | 11 | 147 | 36 | 61 | 08 | 112 | 33 |

**ஆகாயக் காட்சி:**—இம்மாதம் குறிப்பிடத் தக்கன எதுவும் வானத்தே காட்சிக்குரிய பொழுதில் நேருவதில்லை.

**பிரவேஸங்கள்:**—1வ பிற்பகல் மணி 3-22க்கு **புதன் மிதுன** மிருந்து **கடகத்**திற்கும், 19வ பிற்பகல் மணி 3-01க்கு **சனி ரிஷப** மிருந்து **மிதுனத்**திற்கும், 26வ பின் இரவு மணி 6-16க்கு **அங்காரகன் மேஷ** மிருந்து **ரிஷபத்**திற்கும் பிரவேஸ மாகின்றன. 30வ **சுக்ரன் வக்ராரம்பம்.**

* அயனம்சம் பா-22 கலை-56 விகலை 11·5661 கூட்ட **சாயன ஸ்புடம்** வரும்.
† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட **கேது ஸ்புடம்** வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுப்ானு வருஷ ஆடிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1118, ஹிஜிரா 1362
இங்கிலீஷ் 1943 வரு ஜுலைமீ—1943 வரு ஆகஸ்டுமீ

| ஆடிமீ | ஜுலைமீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | சனி | ப◯28-49 | பூ12-40 | சித்60 | வியாஸ பூர்ணிமா |
| 2 | 18 | ஞா | பிர22-47 | உத்8-48 | அமி60 | ஆஷாட பகுளம், கரிநாள் |
| 3 | 19 | திங் | துதி16-48 | திரு4-12 அவி59-57 | அ4-12சி | செவ் / சனி / புத |
| 4 | 20 | செவ் | திரு10-51 | சத56-23 | மர60 | 1-கட-புத; சூ-கு |
| 5 | 21 | புத | சது4-49 பஞ்59-24 | பூர53-27 | அ53-27சி | 16-சிம்-புத; ராகு |
| 6 | 22 | வியா | சஷ்55-13 | உட்51-07 | சித்60 | கே; 19-மிது-சனி |
| 7 | 23 | வெள் | சப்51-38 | ரே49-12 | சி49-12அ | 26-ரிஷ-செ; சுக் |
| 8 | 24 | சனி | அ48-57 | அசு48-05 | சித்60 | |
| 9 | 25 | ஞா | நவ47-56 | பர48-40 | மி48-40சி | |
| 10 | 26 | திங் | தச47-58 | கி✲50-23 | ம50-23அ | கிருத்திகை விரதம் |
| 11 | 27 | செவ் | ஏ48-52 | ரோ53-20 | அ53-20சி | ஸர்வ ஏகாதசி |
| 12 | 28 | புத | து51-11 | மிரு57-36 | சித்60 | மருந்து செய்ய |
| 13 | 29 | வியா | திர54-35 | திரு60-00 | மர60 | பிரதோஷம் |
| 14 | 30 | வெள் | சசி58-47 | ,, 2-23 | சித்60 | மாச சிவராத்திரி |
| 15 | 31 | சனி | ●60-00 | புன8-27 | சித்60 | அமாவாஸ்யை விரதம் |
| 16 | 1 | ஞா | அமா3-33 | பூச14-52 | சித்60 | சூர்ய கிரஹணம் தெரியாது |
| 17 | 2 | திங் | பிர9-08 | ஆ21-35 | சி21-35ம | சிராவண சுத்தம் |
| 18 | 3 | செவ் | துதி13-47 | மக27-37 | சித்60 | காவேரிப் பெருக்கு |
| 19 | 4 | புத | திரு17-57 | பூர33-02 | அமி60 | திரு ஆடிப்பூரம், ஆராய்ச்சி |
| 20 | 5 | வியா | சது21-11 | உத்37-10 | ம37-10சி | சதுர்த்தி விரதம் [செய்ய |
| 21 | 1943 ஆகஸ்டுமீ 6 | வெள் | பஞ்27-47 | அ40-47 | அ40-47சி | நாக பஞ்சமி-கருட பஞ்சமி |
| 22 | 7 | சனி | சஷ்24-05 | சித்43-13 | ம43-13சி | சூர்ய சஷ்டி, சஷ்டி விரதம் |
| 23 | 8 | ஞா | சப்22-40 | சு43-51 | சி43-51ம | ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருநக்ஷத்திரம் |
| 24 | 9 | திங் | அ20-23 | வி43-10 | ம43-10சி | புலனறிய, தூது செல்ல |
| 25 | 10 | செவ் | நவ18-09 | அ42-07 | சி42-07ம | நவக்கிரகசாந்தி [ஏகாதசி |
| 26 | 11 | புத | தச14-27 | கே39-34 | சி39-34ம | தநிவிரதாரம்பம், ஸ்மார்த்த |
| 27 | 12 | வியா | ஏ9-37 | மூல35-58 | சித்60 | புத்ராத ஏகாதசி |
| 28 | 13 | வெள் | துவ4-24 திர58-13 | பூர32-23 | மி32-23சி | தாமோதர துவாதசி, வரலக்ஷ்மி விரதம், பிரதோஷம் |
| 29 | 14 | சனி | சசி52-07 | உத்28-47 | சித்60 | யந்திரம் பயில [கிரஹணம் |
| 30 | 15 | ஞா | ப◯46.17 | திரு24-23 | அ24-33ம | பௌர்ணமி பூஜை, சந்திர |
| 31 | 16 | திங் | பிர40-10 | அ20-23 | சித்60 | சிராவண பகுளம், காயத்ரீ ஜெபம் |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# ஜீவாதார சஞ்சீவி திராவகம்

இது தங்கம், அயம், மற்றும் சில சத்துப் பொருள்களைச் சேர்த்து அனுபோக முறையில் தயார் செய்யப்பட்டதாகும். சரீரத்திலுள்ள தச நாடிகளும் தளர்ந்து பலங் குறைந்து அகால மரணத்துக் குள்ளாகும் கொடிய விபத்துக்கு இத்திராவகம் கைகண்ட சஞ்சீவியைப் போன்றது. இது சரீரத்திற்கு சுகத்தைக் கொடுத்து, ஆயுளை விருத்தி செய்து, பலவீனம், கை கால் ஓய்ச்சல், சோம்பல், தேகம் மெலிதல், ஜீரணக் குறைவு, புளியேப்பம், பசியின்மை, ஞாபகக் குறைவு, தைரியமின்மை, தாது நஷ்டம், கண்டமாலை, மலச்சிக்கல், நரம்புத் தளர்ச்சி, மார் நோய், சரீரம் வெளுத்தல் முதலிய வியாதிகளை ஒரு வாரத்திற்குள் மாந்திரீகம்போல் குணப்படுத்தும். இதுவரையில் எந்த வைத்தியர்களாலும் கண்டுபிடிக்கப்படாத அவுஷதம் இதுவே என்பதை இதை உட்கொண்ட ஐந்து நிமிஷத்தில் தெரிந்து கொள்ளலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரையிலும் உபயோகிக்கலாம்.



புட்டி 1-க்கு விலை ரூபா 1. புட்டி 3-க்கு விலை ரூபா 2—8—0.

## காசா

காசம், இருமல், க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு தலை சிறந்த ஔடதமாகும். (இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி தயார் செய்தது.) இருமல், காசம், இளைப்பு, ஈளை, கபம், குரலடைப்பு, தொண்டைக் கம்மல், தொண்டைவலி, மார் தடிப்பு, மார்பிலும், தொண்டையிலும், சுவாச நாடிகளிலும், குழாய்களிலும் ஏற்படும் ரணங்களை ஆற்றி, இருமலைத் தணியச்செய்து கபத்தை அறவே ஒழித்து, குணப்படுத்தும். **30-நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2-8**

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

---

"ஜீவா" தீட்டிய

# உயிரோவியம்

"உயிரோவியத்தை, நான் ஒரே மூச்சில் படித்தேன் என்றால், அது எவ்வளவு ஸ்வாரஸ்யமாகவும் இனிப்பாகவும் இருந்திருக்கவேண்டும் என்று நான் சொல்லவும் வேண்டுமா?

தூய்மை என்று அசடு தட்டாமலும் கவர்ச்சி என்று சிற்றின்ப மயமாக்காமலும் காதலை எழுத்துச் சித்திரத்தில் வரைவது மிகவும் கடினமான வேலையாகும். இந்த அபூர்வமான வேலையை "ஜீவா" கலையழகு வாய்ந்த எழுத்துத் திறனுடன் செய்து முடித்திருக்கிறார் என்பது என் கருத்து.

உயிரோவியத்தை உடனே படியுங்கள் என்று நான் சிபாரிசு செய்கிறேன்" என்று "நவயுகம்" ஆசிரியர்-ஸ்ரீ. வ. ரா. இக்கதைக்கு எழுதிய முகவுரையில் எழுதியிருக்கிறார்.

இதன் விலை அணா 12. (தபாற் செலவு அணா 5.)

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாரு மில்லை.
ஏன்மலடாய்ப் போவதென்று கேட்பா யாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிகுந்தால் புழுகரித்தால் உதிரங் கெட்டா[ல்
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோறி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கரு தரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் ஷை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.



## சீதபேதி (டிசென்டரி) பவுடர்

இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடிவயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

## குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானால் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0. தபாற் செலவு பிரத்தியேகம்.

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைந் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாய் உண்டாக்கி ஒரு விதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினுலுண்டான பலவீனமும் இம்மருந்தினால் நீங்கும். இரத்த விருத்தியை யுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்ருது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒரு முறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய துடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கும்.

புட்டி 1-க்கு விலை அணு 4. தபாற்கூலி வேறு.



# கண்நோய் மருந்து

இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல். சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மாணக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச் சிறந்த ஒளஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணுடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணு 8. தபாற்கூலி வேறு.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்

ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5-பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனம்மாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அரசூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| [illegible]னி ... | 0 | 12 |
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 3 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணாகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

**[illegible]சமென்னும் சர்வ தேவதா வசியம்**

முதல் பாக[illegible]ண்டாம் பாகமும் சேர்ந்தது. விலை ரூபா 1.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

